# கிழக்காசிய நாடுகளில்



## ஆர். நாகசுந்தரம்

'கண்டவர்களைக் காண் நீ' என்று பெரியவர்கள் சொல்லி விட்டுப் போனார்கள்.

நான், வெளி நாடுகளைக் கண்டவர்களைத் தேடினேன். அவர்கள் வெளி நாடுகளில் தாங்கள் கண்டதையும் கேட்டதையும் கட்டுரைகளாகவும் புத்தகங்களாகவும் எழுதி இருக்கிறார்கள். இவர்கள் எழுதிய கட்டுரைகளையும் நூல்களையும் ஆர்வத்தோடு படித்தேன். ஏ.கே. செட்டியார், சோம. லெ, மணியம், நெ.து. சுந்தரவடிவேலு, மு.க, மாணவர் தலைவர் எஸ். ஜனார்த்தனன், ஆகிய இவர்கள் எழுதிய பயணக் கட்டுரைகள் என்னை மிகவும் கவர்ந்தன. இவர்கள் எல்லாரும் எழுத்தாற்றல் உள்ளவர்கள். இவர்கள் போன இடங்களையும் கண்ட நிகழ்ச்சிகளையும் படிக்கும் போது அவர்களோடு நானும் சேர்ந்துபயணம் செய்வது போலவே எனக்குத் தோன்றியது. இவர்களைப் போல வெளி நாடுகளைச் சுற்றிப் பார்க்கும் வாய்ப்பு எனக்கும் கிட்டாதா என்று நான் ஏங்கினேன்.

இதுவரை நான் கடல் கடந்த நாடுகளுக்குச் சென்றதில்லை. பம்பாய்க்கும், டெல்லிக்கும், பெங்களூருக்கும், கேரளத்திற்கும் அடிக்கடி போய் வந்திருக்கிறேன். ஆனால் அருகிலுள்ள இலங்கைக்குக் கூட நான் போனதில்லை!

இந்த நேரத்தில் எனக்கு ஒரு தித்திப்பான செய்தி கிடைத்தது. கீழ்த்திசை நாடுகளில் இருபது நாட்கள் சுற்றுப் பயணம் செய்ய ஒரு வாய்ப்புக் கிடைத்தது. இந்தோ ஜப்பானிய கலாச்சாரப் பரிமாற்றக் குழுவில் எனக்கும் ஓர் இடம் கிடைத்தது. இதை முதலில் என்னால் நம்ப முடியவில்லை. பத்தாண்டுகளாகக் குழந்தையே இல்லாத ஒரு பெண், தான் கருவுற்றால் எத்தகைய மகிழ்ச்சியை அவள் அடைந்திருப்பாளோ அத்தகைய மகிழ்ச்சியை அடைந்தேன் நான்!

என்னைப் பற்றித் தமிழக மேல் அவைத் தலைவர் அண்ணன் சி.பி.சி. அவர்கள் சொன்ன ஒரு விஷயம் இப்போது என் நினைவுக்கு வந்தது. அவரும் நானும் ஒரே ரயிலில் திருச்சிக்குப் போகும் போது எக்மோர் ஸ்டேஷனில் நாங்கள் சந்தித்துக் கொண்டோம். அவர் ரயிலின் முதல் பெட்டியில் இருந்தார். நானோ அதே வண்டியின் கடைசிப் பெட்டியில் ஒரு சீட் ரிசர்வ் செய்திருந்தேன். இதைக் கேட்டுத் தெரிந்து கொண்டு அண்ணன் சி.பி.சி. 'நீங்கள் எதிலும் எப்போதும் கடைசிதான். ரயிலிலுமா கடைசி?' என்று கேட்டார்.

இப்படிப்பட்ட எனக்கே ஒரு

---

**ஆர். நாகசுந்தரம்**
மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளைதெரு,
மலைக்கோட்டை, திருச்சி-2.
போன் : 7712



கோலாலம்பூர் விமானநிலையத்தில் கட்டுரை ஆசிரியர் திரு. ஆர். நாகசுந்தரம்

பொன்னான வாய்ப்புக் கிடைத்திருக்கிறது என்றால் என் மகிழ்ச்சியைக் கேட்கவா வேண்டும்!

மே மாதம் ஐந்தாம் தேதி என்று என் பயண நாளைக் குறித்து விட்டார்கள்.

எனக்கோ முன் அனுபவம் கிடையாது. இதனால் டிராவலிங் ஏஜென்ஸி அலுவலகங்களுக்கு சென்று அந்தந்த நாட்டு வரை படங்கள், விவரங்கள், பருவ காலங்கள் ஆகியவைகளையெல்லாம் அறிந்து புறப்பட வேண்டும் என்று விரும்பினேன்.

சென்னைக்கு வந்து பயணத்தைத் தொடங்கும் முன்னால் திருச்சியிலுள்ள நண்பர்களிடமும் இயக்கத் தோழர்களிடமும் பயணம் சொல்லிக் கொண்டேன்.

2.5.72 இரவு தூத்துக்குடி எக்ஸ்பிரஸில் என்னை வழியனுப்ப அன்புக்குரியவர்களெல்லாம் திருச்சி ஜங்ஷனுக்கு வந்து கூடி விட்டார்கள். அன்பு மிகுதியால் பெரிய பெரிய மாலைகளையும், தூக்க முடியாத மாலைகளையும், ஜரிகை மாலைகளையும், வேஷ்டிகள், துண்டுகள், அங்கவஸ்திரங்களையும் தூக்கிக் கொண்டு வந்து என்னைத் திணறடித்து விட்டார்கள். அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்!

எனக்குப் போட்ட மாலைகளையெல்லாம் ஒரு கயிற்றில் வரிசையாகத் தோரணம் கட்டி நான் இருந்த ரயில் பெட்டியை அலங்கரித்தார்கள். மலர்த் தோரணங்களைப் பார்த்தவர்களெல்லாம் இந்த வண்டியில் யாரோ ஓர் மகான் சாது போகிறார்போல் இருக்கிறது என்று பேசிக்கொண்டார்கள்!

வாழ்த்தொலிகள். மிக முழங்கத் தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் புறப்பட்டது. பொன்மலை ஸ்டேஷன் வந்தது. நண்பர்களின் படையும் வந்தது. டவுன் ஸ்டேஷன் வந்தது. அன்பர்களும் வந்தார்கள். வழி நெடுகிலும் வழியனுப்பு உபகாரங்களோடு நான் சென்னைக்கு வந்து சேர்ந்தேன்.

இந்தப் பிரயாணத்தை ஏற்பாடு செய்த இந்தோ-நிப்பன் கலாச்சாரக் குழுவினர், இந்தக் குழுவில் யார் யார் வருகிறார்கள், எத்தனை பேர் வருகிறார்கள் என்ற விவரத்தை எனக்குத் தரவில்லை. முன்கூட்டியே தெரிந்திருந்தால் அந்தக் குழுவில் எனது அருமை நண்பர் திரு. ஜனார்த்தனம் உடன் வருகிறார் என்பது தெரிந்திருக்கும். அவர் பல நாடுகள் சுற்றியவர். நிறைந்த அநுபவமுள்ளவர். அவரிடமாவது விவரம் தெரிந்

திருக்கலாம்: அதுவும் இல்லை!

நான், நாலரை முழ வேட்டியும் வெள்ளை ஜிப்பாவையுமே அணிந்து பழக்கப்பட்டவன். நண்பர்கள் சிலர் என்னிடம் வந்து கோட்டும் சூட்டும் பூட்டும் அணிந்து கொண்டு வெளிநாட்டுக்குப் போகும்படி வற்புறுத்தினார்கள். பேரறிஞர் அண்ணா அவர்களும், கலைஞர் அவர்களும் வெளி நாட்டுக்குப் போகும்போது சூட்டும் கோட்டுமாகத்தான் போனார்கள். நீங்களும் அப்படிப் போவதுதான் முறை என்று சொல்லி சூட்டும் கோட்டும் தைக்கச் சொல்லிப் பூட்டும் வாங்கித் தந்துவிட்டார்கள்!

அன்று மாலை 6 மணிக்கு விமான நிலையத்தை நண்பர்கள் புடைசூழப் போய்ச் சேர்ந்தோம். விமான நிலைய அதிகாரிகள் என்னுடைய பாஸ் போர்ட், டிக்கெட், சுகாதார சர்ட்டிபிகேட், கையில் பிரிட்டிஷ் நாணயம் மூன்று பவுனும் அமெரிக்க டாலர் ஐம்பதும் கொடுத்தார்கள்.

இந்தச் சமயத்தில் என்னை வழியனுப்ப வந்தவர்கள் எனக்கு மலர் மாலைகள், ஜரிகை மாலைகள், அங்கவஸ்திரமும் போட்டார்கள். நண்பர் திரு. என். திருஞானசம்பந்தம் (மேனேஜிங் டைரக்டர் சேரா போக்குவரத்து) நீங்கள் இன்ஷூரன்ஸ் செய்து கொள்ளுங்கள் என்று என்னை அழைத்துச் சென்று, விபத்து இன்ஷூரன்ஸ் இருபது நாட்களுக்கு ஐம்பது ரூபாய் வாங்கிப் பணத்தைக் கட்டிவிட்டார். எனது நண்பர் திரு. ஞானையா (E.E. Housing Board) என்னை வெளியே அழைத்து வந்து போட்டோ எடுத்துக் கொண்டார். இந்த நேரத்தில் சேவிகா சங்கத் துணைச் செயலாளர் திருமதி முத்துலெட்சுமி பாசு ஒரு வழியனுப்பு வாழ்த்து இதழைப் படித்தார். விமானம் புறப்படத் தயாராக இருந்தது. என்னுடைய மனைவியிடமும், நண்பர்களிடமும் கையை ஆட்டிவிட்டு விமானத்தில் ஏறி உட்கார்ந்து கொண்டேன்.

விமானம் சரியாகக் காலை 8–15 மணிக்குப் புறப்பட்டது.

விமானத்திற்குள் உட்கார்ந்ததும் இந்தப் பயணத்தில் யார் யார் வருகிறார்கள் என்பதற்கு என்னிடம் ஒரு பட்டியல் தந்தார்கள். அந்தப் பட்டியலைப் பார்த்ததும் நான் ஆச்சரியப் பட்டேன். என் அருமை நண்பர் ஜனார்த்தனம்தான் எங்கள் குழுவின் தலைவர். இந்தக் குழுவில் கோவை நகரசபைத் தலைவர் திரு. சுக்கூரும், திரைப்படத் துறை நண்பர் கோவை திரு. சண்முகமும், தொழிலதிபர் திரு. இராஜேந்திரனும், சாரதி என்ற தெலுங்குப் பத்திரிகை ஆசிரியர் திரு. ரெங்கநாயகலுவும், ஆந்திர நடிகர் திரு. ரகுராமைய்யாவும், தெலுங்கு எழுத்தாளர் திருமதி சுகுணாதேவியும், சென்னை சமூக சேவகியும் கௌரவ நீதிபதியுமான திருமதி ஜெயலெட்சுமி குமாரும், பிரபல தொழிலதிபர் திரு. சீனிவாசன் அவர்களின் மனைவி திருமதி வசந்தியும் ஆக பதினைந்து பேர் எங்கள் குழுவில் இருந்தார்கள். இவர்களில் எழுவர் பெண்கள்.



கோலாலம்பூர் தேசிய நினைவுச் சின்னத்தின் முன் ஆர். நாகசுந்தரமும் குழுவினரும்.

(தொடரும்)

☐ சென்னை நகரில் இரண்டு கோடி ரூபாய் செலவில் டெலிவிஷன் நிலையம் ஒன்று உருவாகி வருகிறது. இந்த டெலிவிஷன் நிலையம் இயங்கத் தொடங்கி விட்டால், சென்னையில் இருப்பவர்கள் மட்டுமின்றிச் சுற்றுப் புறத்தில் 55 மைல் தூரத்துக்குள் இருக்கும் கிராமங்களில் இருப்பவர்கள் கூட டெலிவிஷன் நிகழ்ச்சிகளைக் காண முடியும்!

☐ சிவாஜிகணேசன் வேஷ்டியும் சட்டையும் துண்டும் போட்டுக் கொண்டிருக்கும் போது வயதான மனிதரைப் போல் இருக்கிறார். பேண்ட்டும் சிலாக்கும் போட்டுக் கொண்டிருக்கும் போது இளைஞராகக் காட்சி தருகிறார். இவர் கலந்து கொள்ளும் நிகழ்ச்சிக்குத் தக்கபடி இவர் தன் உடைகளை மாற்றிக் கொள்கிறார்!



☐ காவெண்ட்ரி என்ற நகரில் வசிக்கும் ப்ராங்க் ஸ்மித் என்பவர் சென்ற மூன்று வருஷங்களாக ஓர் அதிசயத்தை நடத்தி வருகிறார். இவர் அந்த அதிசயத்தைத் தன் தோட்டத்தில் விளையும் பூசணிக்காயை வைத்து நடத்தி வருகிறார். காய்கறிகளில் ஊட்டமுள்ளதைத் தயாரிப்பவர்களுக்கு ஆண்டுதோறும் பரிசு உண்டு. சென்ற மூன்று வருஷங்களாக அந்தப் பரிசு, இந்தப் பூசணிக்காய் வீரருக்குகே கிடைத்து வருகிறது! இவர் தோட்டத்தில் விளையும் பூசணிக்காயின் எடை எவ்வளவு தெரியுமா? 155 பவுண்ட்!—நன்றி: டெய்லி மிர்ரர்.

☐ ஹோமியோபதி மருந்துகள் ஜெர்மனியில் தயாராகின்றன. அங்கிருந்துதான் இந்த மருந்துகள் வரவழைக்கப் படுகின்றன. ஹோமியோபதி மருந்தைக் கொடுத்தால் வியாதி மெல்லத்தான் குணமாகும் என்று ஒரு கருத்து இருந்து வருகிறது. 'இது தவறான கருத்து. ஹோமியோபதி மருந்தை முதல் டோஸ் கொடுத்தவுடனே பலன் தெரிய வேண்டும். அப்படிப் பலன் தெரியவில்லை என்றால், அந்த மருந்து உண்மையில் ஹோமியோபதி மருந்து அல்ல' என்கிறார் ஒரு பிரபல ஹோமியோபதி டாக்டர்!

☐ திடீரென்று நெஞ்சு வலி வந்து விட்டால், வெந்நீரில் நனைத்துப் பிழிந்த துணியினால் நெஞ்சில் ஒத்தடம் கொடுக்க வேண்டும். டாக்டர் வரும் வரைக்கும் இந்த வெந்நீர் ஒத்தடத்தை நிறுத்தக் கூடாது!

☐ 'தி.மு.க அரசு ஹிந்தியை எதிர்க்கிறது. ஆனால் தமிழ் நாட்டில் உள்ளவர்கள் ஹிந்திப் படங்களை வரவேற்கிறார்கள். இதனால் ஹிந்திப் படங்களுக்குத் தமிழ்நாட்டில் எந்த ஆபத்தும் வராது' என்கிறார் ராஜ்கபூர்.



# கிழக்காசிய நாடுகள்

## ஆர். நாகசுந்தரம்

எங்கள் பயணப் பட்டியலில் நாங்கள் போகும் முதல் நாடு கோலாலம்பூர். விமானம் உயரே பறக்க ஆரம்பித்தது. எல்லாரும் பெல்டைக் கட்டிக் கொள்ளுங்கள் என்று அறிவிப்பு வந்தது. நான் பெல்ட்டைக் கட்டிக் கொள்ளாமலிருந்தேன். என் அருகிலிருந்த அமெரிக்கர் ஒருவர் இன்னும் பெல்ட் கட்டிக் கொள்ளவில்லையா என்று கேட்டார். அப்போதுதான் விமானப்பயணத்தின் விதிமுறைகளைப் பயணிகள் எப்படிக் கைக் கொள்கிறார்கள் என்பதை உணர்ந்தேன். நானும் அவர்களைப் போல் பெல்ட் கட்டிக் கொண்டேன்.

இந்த நேரத்தில் மாண்பு மிகு அமைச்சர் திரு. சாதிக்பாட்சா அவர்கள் ஒரு சமயம் சொன்னது ஞாபகத்திற்கு வந்தது.

நானும் அமைச்சர் திரு. சாதிக் பாட்சா அவர்களும் ஒரு சமயம் விமானத்தில் பயணம் செய்தோம். அப்போது நான் பெல்ட் கட்டாமல் இருந்தேன். அவர் சொன்னார், 'ஒரு தடவை நான் பயணம் செய்த விமானம் ஒரு குலுங்குக் குலுங்கியது. நான் இரண்டு சீட்டுக்களுக்கு அப்பால் போய் விழுந்தேன். பெல்ட் கட்டாதவர்களெல்லாம் ஒருவர்மேல் ஒருவர் மோதிக் கொண்டார்கள். இதற்குப் பிறகு மிகவும் எச்சரிக்கையாக முன்னமேயே பெல்டைக் கட்டிக் கொள்ள ஆரம்பித்துவிடுவேன்' என்றார். எப்போதும் அனுபவம்தானே சிறந்த ஆசான்!

விமானத்தில் பயணம் செய்பு
சிலருக்கு மயக்கம் வரும். சிலருக்கு
வாந்தி வரும். இவைகளுக்கு எச்ச
ரிக்கையாகச் சாக்லெட்டும் பெருஞ்
சீரகமும் கொடுப்பார்கள். சிலருக்
குக் காது அடைத்துக் கொள்ளும்;
இதற்குப் பஞ்சு கொடுப்பார்கள்.
இதையும் மீறி வாந்தி வந்துவிட்டால்
நமக்கு முன்புறம் ஒரு காகிதப்பை
வைத்திருக்கிறார்கள். இதில் வாந்தி
எடுக்கலாம்!

நாம் எந்த விமானத்தில் செல்லு
கிறோம், எந்த ஊருக்குச் செல்லு
கிறோம், எத்தனை மைல் தூரம், எவ்
வளவு உயரத்தில் பறக்கிறோம் என்ற
விவரங்களை அடிக்கடி அறிவித்துக்
கொண்டு வருகிறார்கள்.

நமக்கு முன்புறம் நாம் செல்ல
இருக்கும் ஊரின் விவரமும் வரை
படமும் வைக்கப்பட்டிருக்கிறது. அன்
றையச் செய்தித்தாளை ஒவ்வொரு
வருக்கும் தருகிறார்கள். இங்கே
தமிழ்ப்பத்திரிகைகளை யாரும் எதிர்
பார்க்கவேண்டாம்!

விமானப் பணிப் பெண், எல்லா
ருக்கும் ஆரஞ்சுப் பழ ரசம் பரிமாறி
னாள். எங்களில் பாதிப்பேர் சைவ
உணவு சாப்பிடுகிறவர்கள். ஆனால்
இங்கே அசைவ உணவு கொடுக்கப்

---

ஆ. நாகசுந்தரம்
மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளைதெரு
மலைக்கோட்டை, திருச்சி-2.
போன் : 7712

பட்டது. எனக்குச் சைவ உணவு வேண்டும் என்று [illegible] கேட்கத் தொடங்கி [illegible]. விமானத்தில் சைவ உணவுக்குத்தான் பஞ்சம். [illegible] சொன்னால் தான் சைவ உணவு சப்ளை செய்து கொடுப்பார்கள். எங்களில் சிலர் சைவ உணவு சாப்பிடுபவர்களாக இருந்தார்கள். மாட்டு மாமிசமோ அல்லது பன்றி மாமிசமோ இருந்தால் அதை எப்படிச் சாப்பிடுவது? இவைகள் எங்களுக்கு அலர்ஜி மாதிரி! ஆனால் உலக நாடுகளில் இவைகள் எல்லாம் சாதாரணமானவைகள். ருசித்துச் சாப்பிடக்கூடிய ஆகாரங்கள். நாம் அவைகளை வேண்டாம் என்று சொன்னால் நம்மை அவர்கள் கேலியாகப் பார்ப்பார்கள்!

விமானம், கோலாலம்பூர் வந்து விட்டது. இப்போது மணி 11–30. கோலாலம்பூர் நெருங்கும்போது உங்கள் கடிகாரங்களைத் திருப்பி வைத்துக் கொள்ளுங்கள் என்று அறிவிப்பு வந்தது. இப்போது நடுப்பகல் 1–30 மணி.

உலகம் உருண்டை அல்லவா? நாங்கள் கிழக்கே போகப் போகச் சூரியன் மேற்கே போய்க் கொண்டிருக்கிறான். கோலாலம்பூருக்கும் சென்னைக்கும் இடையே 2 மணி நேரம் வித்தியாசம்!

வெளிநாடுகளில் எந்த ஊரில் விமான நிலயத்திற்குள் நுழைந்தாலும் அவர்களிடம் நமது பெயர், பிறந்த ஊர், பிறந்த தேதி, பாஸ்போர்ட் நம்பர், எதற்காக அந்த ஊருக்கு வந்திருக்கிறோம், எங்கே தங்கப் போகிறோம், எத்தனை நாள் தங்கப் போகிறோம் என்ற விவரங்களை நாம் தந்தாக வேண்டும். இதற்காக ஒரு பாரம் விமானத்திலேயே தந்துவிடுவார்கள். இதைப் பூர்த்தி செய்து அங்குள்ள அதிகாரிகளிடம் கொடுத்துவிட வேண்டும். அங்குள்ள அதிகாரிகள் நமக்கு எத்தனை நாள் விசா தருகிறார்களோ அத்தனை நாள்தான் நாம் அந்த ஊரில் தங்க முடியும். நம்முடைய ஹெல்த் சர்ட்டிபிகேட்டை இங்கே வாங்கிப் பார்க்கிறார்கள். இதில் அம்மை, காலரா போன்ற வியாதிகளுக்கு ஊசி போட்டிருக்கிறோமா என்று பார்த்த பிறகுதான் ஊரின் உள்ளே போக அனுமதி கொடுக்கிறார்கள். இதில் ஏது இல்லாவிட்டாலும் ஊருக்குள்ளே நுழைய முடியாது!

கோலாலம்பூர், சென்னையிலிருந்து 1,650 மைல் தூரத்தில் இருக்கிறது. விமானம் பறக்கும் நேரம் 3 மணி 20 நிமிடங்கள். மலேசியாவின் தலைநகரமான செவாங்கூரிலுள்ள கோலாலம்பூர் விமான நிலயம் ஒரு Internationol Airport. இது மிகப் பெரியது. மிக அழகானது. நாங்கள் சுங்கச் சோதனைகளை வெருவாக எதிர்பார்த்தோம். அவ்வளவு கெடுபிடி இல்லை. பிரயாணிகளிடம் மிகவும் மரியாதையாக நடந்து கொண்டார்கள். இங்குப் பார்வையாளர்கள் மாடி மீதிருந்தே விருந்தினர்களை வரவேற்கிறார்கள். நம் ஊர் விமான நிலயங்கள்போலக் கட்டணம் வசூலிப்பது கிடையாது. விமான நிலயத்திலிருந்து ஊரில் நுழைந்த உடனேயே நம் கண்ணில் படுவது சாலை ஓரங்களில்உள்ள ரப்பர் மரங்கள்தாம். இங்கு ரப்பர்தான் ஏற்றுமதி செய்கிறார்கள். இங்கு உற்பத்தியில் 45 சதவிகிதம் வெளி நாடுகளுக்கு அனுப்பி வைக்கிறார்கள்.

ரப்பர்த் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் பெரும்பாலும் இந்தியர்களே. நம் ஊர்களில் காலையில் எழுந்து கள் இறக்கப் புறப்படுகிறார்களே, அதுபோல, இங்கும் காலையில் எழுந்து ரப்பர்ப் பால் எடுக்கப் புறப்படுகிறார்கள். பிறகு போனால் பால் வற்றி விடுமாம்!

மலேசியாவில் 45 சதவிகிதம் மலேசியர்களும் 35சதவிகிதம் சைனாக்காரர்களும் 10 சதவிகிதம் இந்தியர்களும் இருக்கிறார்கள். மலேசியாவை மேற்கு மலேசியா, கிழக்கு மலேசியா என்று இரண்டு பிரிவுகளாகப் பிரித்திருக்கிறார்கள். மலேசியாவின் மக்கள் தொகை 11 மில்லியன். ஜனநாயகக் கொள்கைதான் இங்குக் கடைப்பிடிக்கப்படுகிறது. பாராளுமன்றத்திற்கு 114 பிரதிநிதிகளும் சட்ட மன்றத்திற்கு 28 உறுப்பினர்களும் இருக்கிறார்கள். இந்த நாட்டை அரசர்தான் ஆளுகிறார்.

ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை அரசர் தேர்ந்தெடுக்கப்படுகிருர்.

சுற்றுலாவுக்காகவும் ஓய்வு நாட்களைக் கழிப்பதற்காகவும் இங்குள்ள TOURIST AGENTS சிறந்த வழி காட்டிகளாக விளங்குகிருர்கள். இங்கு சுற்றுலாக்காரர்களுக்கு ஊர் சுற்றிக் காட்ட ஏர் கண்டிஷன் பஸ்கள், கார்களை ஏற்பாடு செய்கிருர்கள். இதில் நன்கு பயிற்சி பெற்ற கைடு ஒருவரை அனுப்புகிருர்கள். இவர்கள் ஆங்கிலத்தில் நன்கு விளக்கம் தருகிருர்கள். கோலாலம்பூரில் அரை நாள் தான் ஊர் சுற்றிப் பார்க்க நேரம் ஒதுக்கியிருந்தார்கள். சரித்திரப் பிரசித்தி பெற்ற இடங்களையெல்லாம் பார்க்க அரை நாள் போதுமா?

இங்கு ஒரு பிரமாண்டமான பள்ளி வாசலைப் பார்த்தோம். மிகவும் நேர்த்தியான முறையில் சலவைக் கற்களால் இந்தப் பள்ளி வாசல் கட்டப்பட்டிருக்கிறது. ஒரே நேரத்தில் எட்டாயிரம் பேர் இருந்து தொழுகை நடத்த ஒரு பெரிய மண்டபம் கட்டி இருக்கிருர்கள் இந்தப் பள்ளி வாசலில். இந்த மசூதியைக் கட்டப் பத்து மில்லியன் டாலர் செலவு செய்திருக்கிருர்கள்.

பெண்கள் தொழுகை நடத்தத் தனியே ஒரு மண்டபமே இருக்கிறது. பெண்கள் மினிஸ்கர்ட் இங்கு சர்வ சாதாரணம். பள்ளி வாசலுக்கு வரும் பெண்களுக்கு வாசலின் முன்புறம் கறுப்பு அங்கி வைத்திருக்கிருர்கள். இந்த உடையை உடுத்திக் கொண்டுதான் தொழுகைக்குச் செல்ல வேண்டும் என்பது இங்கு விதி. தொழுகை முடிந்ததும் கறுப்பு உடையைக் கழற்றி அங்கேயே வைத்து விட்டு வந்து விடுகிருர்கள். இதற்குக் கட்டணம் கிடையாது.

இங்கு ஒரு தேசிய நினைவுச் சின்னம் கட்டி இருக்கிருர்கள். இது வெண்கலத்தால் செய்யப்பட்டிருக்கிறது. சுற்றுலா வருபவர்களை இது மிகவும் கவர்ந்து நிற்கிறது. இதன் உயரம் நாற்பது அடி. யுத்தத்தில் உயிர் நீத்த போர் வீரர்களின் நினைவாக இது எழுப்பப்பட்டிருக்கிறது. இங்கு இன்னொரு பார்க்கத் தக்க அம்சம் ரூமா சபா ஹவுஸ் என்ற பாராளு மன்ற உறுப்பினர் விடுதி. இது முன்னாள் புருனே சுல்தானின் அரண்மனை. இதை 55 நாட்களில் கட்டி முடித்திருக்கிருர்கள். 830 ஆயிரம் மலேசியா டாலர் செலவு செய்து கட்டியிருக்கிருர்கள்.

கோலாலம்பூரிலேயே மிகவும் சிறப்பான கட்டடம் இது.

இங்கு வீதிகளெல்லாம் மிகவும் சுத்தமாக இருக்கின்றன. தூசு குப்பைகளையே கிடையாது. காரணம், இங்கு வீதியை அசுத்தப் படுத்தினால் 50 டாலர் வரை அபராதம் கட்ட வேண்டும். இதைப் பார்த்துவிட்டு நம் நாட்டு வீதிகளையும் பார்த்தால் நாம் மிக மிக வருந்த வேண்டியுள்ளது. நம் நாட்டில் அரசியல் கட்சிகள் மக்களின் ஓட்டுக்களை நம்பி இருக்கிற காரணத்தால் அரசியல் வாதிகள் எந்தக் கட்சியாக இருந்தாலும் சிபாரிசுகளுக்கு வந்து விடுகிறார்கள். மக்கள் நடை பாதையில் வீடு கட்டிக் கொள்வது இங்குப் பெரும் நியூஸன்ஸாக இருக்கிறது. இந்தத் தவறுகளைச் செய்யும் போது அரசியல் கட்சிகளின் குறுக்கீடுகள் இருப்பதால் நம் நாட்டில் அவைகளை அமுல் நடத்த முடியவில்லை.

இங்கு 1962ல் ஒரு பெரிய ஸ்டேடியம் கட்டி இருக்கிறார்கள். ஒரே சமயத்தில் பன்னிரண்டாயிரம் பேர் உட்கார்ந்து கொண்டு இங்கு நடக்கும் நிகழ்ச்சிகளைப் பார்க்கலாம். இது ஒரு ஏர் கண்டிஷன் ஸ்டேடியம்.

இங்கு ஆங்கிலத்திற்கு ஓரளவு மதிப்புத் தருகிறார்கள். யாரிடமும் ஆங்கிலத்தில் ஏதாவது கேட்டால் பதில் சொல்லுகிறார்கள். ஒரு வீதியில் செட்டிமார் கடைகள் நிறைய இருக்கின்றன. இங்கு தான் தமிழில் விளம்பரப் பலகைகளைப் பார்த்தோம். இரவு உணவுக்காக இந்த வீதிக்குப் போய் நம் ஊர் தோசை, இட்லி, சாம்பார், சட்னி, நல்ல காப்பி இவைகளை வயிறு புடைக்கச் சாப்பிட்டோம். தமிழர்கள் எங்கிருந்தாலும் வாழ்க என்று வாழ்த்திவிட்டு வந்தோம். தமிழர்கள் எங்கிருந்தாலும் முருகனை மறப்பதில்லை.

இதனால் இங்கு ஒரு மலையின் மேல் முருகன் கோவில் கட்டியிருக்கிறார்கள். இதற்குப் பத்துமலை முருகன் கோவில் என்று பெயர் வைத்திருக்கிறார்கள். இங்கு முருகன் திருவிழாக்களை நடத்தித் தமிழர்களையெல்லாம் ஒன்றாகத் திரட்டுகிறார்கள்.

நான் இங்கு வருமுன் நமது திருவாசக மணி அவர்கள் இங்குள்ள அவருடைய நண்பர் திரு. எஸ். ராஜசுந்தரம் அவர்களுக்கு ஒரு கடிதம் தந்திருந்தார்கள். இங்கு வந்தவுடன் அவரைத் தொலைபேசியின் மூலம் தொடர்பு கொண்டேன். தமிழ் நேசன் ஆசிரியர் திரு. முருகு சுப்பிரமணியன் அவர்களையும் தொலைபேசியின் மூலம் தொடர்பு கொண்டேன். திரு. எஸ். ராஜசுந்தரம் இரவு எட்டு மணிக்கு நான் தங்கியிருந்த பார்க் ஹோட்டலுக்கு வந்து என்னைச் சந்தித்தார். இவர் ஒரு தொழிற் சங்க வாதி. எங்கள் தொழிற்சாலைகளையெல்லாம் தொழிலாளர்களையெல்லாம் சந்தித்துவிட்டுப் போக வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். எங்கள் திட்டம் இங்கு அரை நாள் தங்கிச் சுற்றிப் பார்ப்பதுதான். இதனால் இவர் மிகவும் கோபித்துக் கொண்டார். ஒரு மணி நேரம் பல்வேறு செய்திகளைப் பேசிவிட்டு விடை பெற்றுச் சென்றார்.

இரவு பத்து மணிக்கு திரு முருகு சுப்பிரமணியம் என் அறைக்கு வந்தார். அவர் திருச்சிராப் பள்ளியில் எங்கள் வீதியில் தங்கிப் படித்தவர். நீண்ட நாட்களுக்குப் பிறகு சந்தித்துக் கொண்டோம். ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தோம். திரும்பி வரும் போதாவது இங்கு வந்து தங்கி விட்டுப் போங்கள் என்று வற்புறுத்தினார் முருகு சுப்பிரமணியம். நமது தமிழ் மொழிக்காக உலகத் தமிழ் மாநாட்டை மிகச் சிறப்பாகக் கொண்டாடி அகில உலகத் தமிழ் அறிஞர்களை ஒன்று திரட்டிய மலேசிய நாட்டுக் கோலாலம்பூரிலே ஒரு நாள் தங்கி இருந்து பலரைச் சந்திப்பதற்குப் போதாது தான். என்ன செய்வது? பயணத்தை ஏற்பாடு செய்தவர்களின் கவனக் குறைவுதான் இதற்குக் காரணம்.

நாங்கள் போகும் அடுத்த நாடு பாங்காக். மே மாதம் 6ந் தேதி காலை 9 மணிக்குத் தாய்லாந்தின் தலை நகரமான பாங்காக்கிற்குப் புறப்பட்டோம்.

(தொடரும்)



# கிழக்காசிய நாடுகள்

## ஆர். நாகசுந்தரம்

பாங்காக். இது தாய்லாந்தின் தலைநகர். நாங்கள் பயணம் செய்த விமானம் தாய் ஏர்லைன்ஸ். இதில் பயணிகளை மிகவும் பிரமாதமாக உபசரிக்கிறார்கள். மது வகைகளில் நாம் என்ன டிரிங்ஸ் விரும்புகிறோமோ அதைக் கொடுத்து நம்மைத் திருப்திப் படுத்துகிறார்கள். மது அருந்ாதவர்களுக்கு ஆரஞ்சுப் பழ ரசம் கொடுக்கிறார்கள். சிகரெட் புகைப்பவர்களுக்குச் சிகரெட் கொடுத்து நெருப்பும் பற்றவைத்து உதவுகிறார்கள். சிற்றுண்டிகளும் உணவும் கொடுத்து நம்மைத் திணற வைக்கிறார்கள்.

நாங்கள் பாங்காக்கில் உள்ள மிகப் பெரிய ஹோட்டலான VIMTAI HOTEL லில் தங்கினோம். ஒஸாகாவைத் தவிர நாங்கள் தங்கிய ஹோட்டல்கள் அத்தனையும் ஐந்து நட்சத்திர ஹோட்டல்கள். இங்குள்ள ஹோட்டல்களில் குளிர் சாதன வசதி, டெலிவிஷன் ரேடியோ இல்லாத ஹோட்டல்களே இல்லை. இங்குள்ள சுற்றுலா பஸ்களில் எல்லாம் AC அமைத்திருக்கிறார்கள். பாங்காக் நகரைச் சுற்றிப் பார்க்க ஒரு வழிகாட்டியுடன் புறப்பட்டோம்.

இந்த ஊரைச் சுற்றி வரும்போது ஏராளமான புத்த கோவில்களைப் பார்த்தோம். எங்களுக்குக் கும்பகோணமும் காஞ்சீபுரமும்தான் நினைவுக்கு வந்தன. புத்தமதத்தின் வேர் இந்தியாவில் இருந்தாலும் இதன் கிளைகள் தாய்லாந்து, ஜப்பான், சயாம் போன்ற இடங்களில் பரவிக் கிடக்கின்றன. இவ்வூரில் மட்டும் 94 சதவிகிதம் புத்த மதத்தினர் வாழ்கிறார்கள். இங்கே மட்டும் 300 புத்த கோவில்கள் உள்ளன. சிறிய கோவில்களிலிருந்து மிகப் பெரிய கோவில்கள் வரை, மிகப் பழைய கோவில்களிலிருந்து மிகப் புதிய கோவில்கள் வரை உள்ளன.

இங்குள்ள ஒரு பெரிய புத்த




ஆர். நாகசுந்தரம்
மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை தெரு
மலைக்கோட்டை, திருச்சி-2.
போன் : 7712

கோவிலில் ஒரு புத்தர் சிலையைப் பார்த்தோம். ஸ்ரீரங்கத்தில் ரங்கநாதர் படுத்திருப்பதைப்போல இருநூறு அடி நீளம் அறுபது அடி உயரம் உள்ள ஒரு பெரிய புத்தர் சிலையைப் பார்த்துவிட்டு வியந்தோம். ஐந்தரை டன் தங்கத்தினால் ஆன ஒரு புத்தர் சிலையை இங்குள்ள ஒரு கோவிலில் பார்த்து வியந்தோம். இங்கு பஸ்களில் யாத்ரீகர்கள் ஏராளமாக வந்துகொண்டே இருக்கிறார்கள். ஒவ்வொரு பஸ்ஸிலும் ஒரு கைடு மைக் வைத்துக் கொண்டு தகவல் கொடுத்துக் கொண்டு வருகிறார். இங்குள்ள டூரிஸ்ட் பஸ்கள் ஒவ்வொரு ஹோட்டலாகப் போய் அரை நாள், முழு நாள் என்று பேசிக் கொண்டு பயணிகளை ஏற்றிக் கொண்டுவந்து இந்த இடங்களைக் காட்டுகிறார்கள். இங்கு டூரிஸ்ட் டாக்ஸிகளும் ஏராளம். டாக்ஸியில் குளுகுளு வசதியும், ரேடியோ வசதியும் செய்திருக்கிறார்கள். இங்கு டவுன் பஸ்களில் ஒரே கட்டணம் வைத்திருக்கிறார்கள். எந்த இடத்திலும் ஏறலாம். எந்த இடத்திலும் இறங்கலாம். ஆனால் கட்டணம் மட்டும் ஐம்பது செண்ட் தான். இங்குள்ள மாணவர்கள், கையில் ஒரு கேமராவை வைத்துக் கொண்டு சுற்றுகிறார்கள்.

இவ்வூர் நாணயத்திற்கு பாட் என்று பெயர். ஒரு பாட் நம்முடைய ரூபாய்க்கு இரண்டு ரூபாய் அறுபது பைசாவுக்குச் சமம். நாம் ஒவ்வொரு நாட்டிலும் விமான நிலையத்தில் இறங்கியவுடன் அவ்வூர் நாணயத்தை மாற்றிக் கொள்ள வேண்டும். இல்லையேல் பணம் இருந்தும் பராரியாகத்தான் சுற்றி வர வேண்டும்!

மனிதன் எல்லா சுகபோகங்களோடும் மகிழ்ச்சியோடும் வாழ வேண்டும் என்பதுதான் இங்குள்ளோர் குறிக்கோள். இங்கு ஸ்ட்ரீம் பாத் என்ற நீராவிக் குளியல் முறை ஒரு புதுமையான அம்சம். குளிக்க விரும்புகிறவர்கள் இங்குள்ள நீராவி அறையில் குளிக்கலாம். பெண்கள் தான் நம்மைக் குளிப்பாட்டுகிறார்கள். நமக்கு விருப்பமான பெண்ணைக் கூப்பிட்டால் அவள் வந்து நம்மைக் குளிப்பாட்டுவாள். இதற்குக் கட்டணம் முப்பது பாட். அதாவது நம்முடைய ரூபாய்க்கு எழுபத்தெட்டு ரூபாய். ஆண்களைப் பிறந்த மேனியாகப் படுக்க வைத்து இங்கே பல அழகிகள் குளிப்பாட்டுகிறார்கள். இவர்களுக்குக் கூச்சம் இருப்பதில்லை. காரணம், இதை ஒரு தொழிலாக இவர்கள் செய்கிறார்கள். இங்குக் குளிக்க வருகிறவர்களும் விரசமாக நடந்து கொள்வதில்லை.

தாய்லாந்து நாட்டின் மக்கள் தொகை முப்பத்தாறு மில்லியன். இதன் பரப்பளவு மூன்று இலட்சத்து இருபத்தோராயிரத்து இருநூற்று ஐம்பத்து ஒன்பது மைல். பாங்காக்கின் மக்கள் தொகை 3.1 மில்லியன். இங்கு அரிசி உற்பத்தி அதிகம்.

அரசாங்கம் நடத்தும் தேசீயத் திருவிழாக்களில் உழவர் திருநாள் (PLOUGHING CEREMONY) மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. நாங்கள் தங்கியிருந்தபோது இந்த விழா பாங்காக்கில் நடந்தது. இதற்காக அரசாங்க விடுமுறை விட்டிருக்கிறார்கள். ரேஸ்கோர்ஸ் மைதானம் போன்ற ஒரு பெரிய மைதானத்தில் இந்த விழா நடக்கிறது. மைதானத்தின் நடுவில் ஒரு மண்டபம் அமைத்திருக்கிறார்கள். மண்டபத்தில் மன்னருக்கும் அரசாங்க உயர்தர அதிகாரிகளுக்கும் பல ஆசனங்கள் போட்டிருக்கிறார்கள். மைதானத்தைச் சுற்றிலும் தற்காலிக அடைப்புக் கட்டியிருக்கிறார்கள். அடைப்புக்கு வெளியே ஆயிரக்கணக்கான மக்கள் கூடி நின்று நிகழ்ச்சியைக் கவனிக்கிறார்கள். மைதானத்தின் ஒரு புறத்தில் பிரமுகர்கள் உட்கார இடம் ஒதுக்கி இருக்கிறார்கள். அரசாங்கச் சாதனைகளை விளக்கும் வெவ்வேறு இலாகாக்களின் கூடாரங்கள், தற்காலிகக் கடைகள், மார்க்கெட்டுகள் எல்லாம் இங்கு அமைத்திருக்கிறார்கள்.

காலை எட்டு மணிக்கு அரசர் காரில் வருகிறார். அவரோடு அதிகாரிகளும் வருகிறார்கள். அரசர் அவருக்காக அமைக்கப்பட்ட மேடைக்குச் சென்று ஆசனத்தில் அமருகிறார். அவரால் நியமிக்கப்பட்ட ஓர் அதி

காரி இரண்டு மாடுகள் பூட்டிய தங்க ஏர்க் கலப்பையால் நிலத்தை உழுது கொண்டே போகிறார். அவருடன் தாய்லாந்தின் அழகிய பெண்கள் சிலேர் தங்கம்—வெள்ளிக் கூடைகளில் தானியங்களைச் சுமந்து கொண்டு போகிறார்கள். அதிகாரி அந்தத் தானியங்களைத் தூவிக் கொண்டே போகிறார். இரண்டு மணி நேரம் அந்த மைதானத்தை உழுது முடிக்கிறார்கள். விழா முடிகிறது. அரசரும் அதிகாரிகளும் அவ்விடத்தைவிட்டு வெளியேறுகிறார்கள். வெளியே நின்ற மக்கள் அடைப்புக்களைத் திறந்து கொண்டு ஓடி வருகிறார்கள். நிலத்தில் இறைக்கப்பட்ட தானியங்களையெல்லாம் பொறுக்குகிறார்கள். தங்களுடைய சொந்த வயல்களில் இந்தத் தானியங்களை விதைப்பதற்காகச் சேர்த்து வைத்துக் கொள்கிறார்கள். இந்த நிகழ்ச்சியை டெலிவிஷனில் நேர்முக வர்ணனையோடு காண்பித்தார்கள்.

வருகிற ஆண்டின் மழையைக் குறிக்கச் சடங்கு நடக்கிறது. அரசர் மூன்று வெவ்வேறு அளவுள்ள சால்வைகளை அதிகாரிக்குப் போர்த்துகிறார். இதில் ஒரு சால்வையை எடுத்து அளக்கிறார். அதுதான் வருகிற ஆண்டின் மழையைக் குறிக்கிறது என்று சொல்லுகிறார்கள். இந்த விழா, தமிழகத்தில் நடைபெறும் உழவர் திருநாளையும், பொங்கல் திருநாளையும் நினைவூட்டுகிறது.

பாங்காக்கில் பார்க்க வேண்டிய அம்சங்களில் மிகவும் சிறப்பானது மிதக்கும் சந்தைதான் (FLOATING MARKETS). வெளிநாட்டிலிருந்து வரும் பயணிகள் இதைத் தவறாமல் பார்த்துவிட்டுப் போகிறார்கள். தாய்லாந்தில் சோபியா என்ற ஒரு நீளமான ஆறு ஓடுகிறது. இந்த ஆறு இங்குள்ள தீவுகளைச் சுற்றிச் சுற்றி ஓடுகிறது.

ஆரம்பத்தில் இந்த ஆறு இருநூறு அடி அகலமாகவும், பின்னர் ஐம்பது அடி அகலமாகவும் குறுகிச் சிறு வாய்க்காலாகத் தீவைப் பின்னிப் பின்னி ஓடுகிறது. தரை மார்க்கமாகப் போக்குவரத்து நடைபெறுவது போல, ஆற்றிலும் வாய்க்காலிலும் பெர்ரீஸ் மூலம் போக்குவரத்து நடைபெறுகிறது.

இந்தப் பகுதிகளில் வியாபாரம் முழுவதும் படகுகள் மூலமாக நடைபெறுகிறது. மண்ணெண்ணெய், ஐஸ்கிரீம் மற்ற எல்லாச் சாமான்களும் படகுகளில் வைத்து விற்கிறார்கள். ஆற்றின் இருபுறமும் கடைகளும் வீதிகளும் நிரம்பி இருக்கின்றன. இந்த வீடுகள் மரத்தினால் கட்டப்பட்டிருக்கின்றன. படகுகளில் சூடும் பழம் நடத்துகிறார்கள். ஸ்டீம் படகுகளும் வேகமாகப் போகும் எக்ஸ்பிரஸ் படகுகளும் இங்கு ஏராளமாக உள்ளன. நான்கு ஐந்து படகுகளில் சரக்குகளை ஏற்றிக் கொண்டு குட்ஸ் டிரெயின் போவது போல இங்கு ஸ்டீம் போட்டுகள் போகின்றன.

இங்குள்ள மக்கள் மழைத் தண்ணீரைத்தான் குடிக்கிறார்கள். பெரிய பெரிய மண் குடங்களில் மழை நீரைப் பிடித்து வைத்துக் கொள்கிறார்கள். இதைத்தான் குடி நீராகப் பயன்படுத்துகிறார்கள். மழை நீரைப் பிடித்து வைத்துக் கொள்வதற்காகப் பெரிய பெரிய சால்களைச் செய்து வைத்திருக்கிறார்கள். இந்தச் சால்களில் மழை நீரை நிரப்பி வைத்துக் கொண்டு தேவையான போது உபயோகப்படுத்துகிறார்கள். இந்த வழக்கம் நெடுங்காலமாக இங்கு இருந்து வருகிறது.

கிட்டத்தட்ட 4 மில்லியன் மக்கள் தொகை கொண்ட இந்த நகரத்தில் ஏராளமான கார்கள் ஓடிக் கொண்டிருக்கின்றன. ஆனால் ஹாரன் சப்தமே கிடையாது. அவ்வளவு ஒழுங்காகச் செயல்படுகின்றன. ஆறுகளிலும் ஏராளமான படகுகள் ஓடிக் கொண்டிருக்கின்றன. எப்போது பார்த்தாலும் இந்த நகரம் சுறுசுறுப்பாகவே இருக்கிறது. ஆபீஸ் நேரங்களிலும் பள்ளிக்கூட நேரங்களிலும் பெரியவர்களும் சிறியவர்களும் வீட்டுக்கு வீடு படகுகளில் போவதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். படகுகள் இவர்களை ஏற்றிக் கொண்டு போய்த் திருப்பிக் கொண்டு வந்து விடுகின்றன. படகுப் போக்குவரத்தில் நெருக்கடி ஏற்பட்டு விடுகிறது. இந்த நேரங்களில் டிராபிக் போலீஸ்காரர்கள் வருகிறார்

கள். போக்குவரத்து நெரிசலைக் குறைக்கிறார்கள்.

இங்கு மூன்று சக்கர சைக்கிள்களில் பெட்டிக் கடை வைத்து நடத்துகிறார்கள். மோட்டார் சைக்கிள்களில் டீக்கடை வெற்றிலை பாக்குக் கடைகளெல்லாம் நடத்துகிறார்கள். பஸ்களில் ரூட் நெம்பர்கள் பெரிதாகப் போட்டிருக்கிறார்கள். பஸ் ஸ்டாப்புக்களிலும் பெரிய எழுத்துக்களில் எந்தெந்த ரூட் பஸ்கள் வந்து நிற்கும் என்று எழுதியிருக்கிறார்கள்.

பஸ்களில் பாய் பாய் என்றால் ஸ்டாப் என்று அர்த்தம். ஹோல்ட் ஆன் என்று சொல்லுவதற்கும் பாய் பாய் என்றுதான் சொல்லுகிறார்கள். வார்த்தை ஒன்றுதான்; ஆனால் உச்சரிப்பு மட்டும் சிறிது மாறுபடுகிறது.

இங்குப் பிளாஸ்டிக் படும்பாடு சொல்ல வேண்டியதில்லை. ரசம் சாம்பாரைக்கூடப் பிளாஸ்டிக் பைகளில் தான் தருகிறார்கள். மளிகை சாமான்கள், துணிமணிகள் எல்லாமே பிளாஸ்டிக் பைகளில்தான் கொடுக்கிறார்கள். கொக்கோ கோலாவைப் பிளாஸ்டிக் பைகளில் ஊற்றி ஸ்ட்ரா போட்டுக் கொடுக்கிறார்கள். உறிஞ்சி உறிஞ்சிக் குடிக்க வேண்டியதுதான்!

பாங்காக்கில் நல்ல வெயில். இது நம் சென்னையை நினைவு படுத்தியது. பாங்காக்கிலிருந்து 11-30 மணிக்கு ஒசாகாவுக்கு விமானம் புறப்பட வேண்டும். ஆனால் அன்று மாலை 4 மணிக்குத்தான் விமானம் புறப்பட்டது. தாமதமாகப் புறப்பட்டதால் ஒசாகாவுக்கு நேரே செல்ல முடியாமல் தாய்வான் தலைநகரமான தாய்ப்பேயில் தங்கினோம்.

சியாங்கே ஷேக்கின் சொந்த ஊர் தாய்வான். இதன் தலைநகர்தான் தாய்ப்பே. எங்களின் பயணப் பட்டியலில் இந்த ஊர் சேர்க்கப்படவில்லை. இருந்தாலும் கூடுதலாக ஒரு புதிய ஊரைப் பார்க்கும் சந்தர்ப்பம் கிடைத்ததற்காக மிகவும் சந்தோஷப்பட்டோம். இதனால் தாய்ப்பே நகரத்தையாவது ஒரு சுற்றுச் சுற்றிப் பார்த்துவிட்டு வரலாம் என்று புறப்பட்டோம். நீங்கள் ஹோட்டலை விட்டு எங்கும் புறப்படக்கூடாது என்று கஸ்டம்ஸ்காரர்கள் உத்தரவு போட்டுவிட்டார்கள். சியாங்கே ஷேக் ஊருக்கு வந்தும் ஊரைச் சுற்றிப் பார்க்க முடியாமல் ஓர் உத்தரவு எங்களைத் திகைக்க வைத்துவிட்டது!

தாய்ப்பே விமான நிலையம் ஒரு மிகப் பெரிய பிரும்மாண்டமான விமான நிலையம். எல்லா நவீன வசதிகளையும் உடையது இந்த விமான தளம். வேறு எந்த விமான நிலையத்திற்கும் இல்லாத ஒரு தனிச் சிறப்பு இந்த விமான நிலையத்திற்கு உண்டு. விமானத்திலிருந்து நேரே AIRPORT அலுவலகத்திற்குப் போக ஓர் ஏர் கண்டிஷன் பாதை போட்டிருக்கிறார்கள். இது போலப் பத்துக்கு மேல் வழிகள் அமைத்திருக்கிறார்கள். விமானம் வந்து இறங்கியவுடன் இந்தப் பாதையைப் பொருத்தவும் கழற்றவும் வசதி செய்திருக்கிறார்கள். இந்த வசதிகள் வேறு எந்த விமான நிலையத்திலும் இல்லை. இங்கே விமான தளம் முழுவதும் பட்டுக் கம்பளங்கள் விரித்திருக்கிறார்கள். விமான நிலையத்திற்கு மிக அருகிலுள்ள மந்தாரின் என்ற ஹோட்டலில்தான் தங்கினோம். இந்த ஹோட்டலை ஒரு பெரிய அரண்மனையைப்போலக் கட்டியிருக்கிறார்கள். எல்லா நவீன வசதிகளும் இங்கு உண்டு.

மே மாதம் 9ம் தேதி காலை 6 மணிக்குத் தாய்ப்பே விமான நிலையத்தைவிட்டு ஜப்பான் நாட்டுக்குப் புறப்பட்டோம்.

தாய் ஏர்லைன்ஸ் விமான மூலம் ஜப்பான் நாட்டிலுள்ள ஒஸாகா விமான நிலையத்திற்கு வந்து சேர்ந்தோம். இதுவரை ஊர் சுற்றும் பிரயாணிகளாகவே நினைத்துக் கொண்டிருந்த எங்களை வருக வருக என்று வரவேற்றது ஒஸாகா. 'இந்தோ—நிப்பன் கலாச்சாரத் தூதுக் குழுவினரே வருக' என்று எங்களை நிப்பன் வேதாந்த சொஸைட்டி நண்பர்களும், கலாச்சாரக் கழக நண்பர்களும் வரவேற்றார்கள். ஒஸாகா விமான நிலையத்திலிருந்து 65 கி. மீ. தூரத்திலுள்ள தாகாசுகி என்ற இடத்தில் உள்ள நிப்பன்

வேதாந்த சொசைட்டி கட்டடத்திற்கு அழைத்துக் கொண்டு போனார்கள். நண்பர்கள் வரவேற்றதைப் போலவே நல்ல மழையும் எங்களை வரவேற்றுக் குளிர வைத்தது!

கடந்த மூன்று நாட்களாக இந்திய உணவிற்காக ஏங்கியிருந்த எங்களுக்கு வேதாந்த சொசைட்டியினர், சாம்பார் ரசம் காய்கறிகளோடு மதிய உணவு பரிமாறினார்கள். இது எங்களுக்குத் தேவாமிர்தமாக இருந்தது!

மாலை ஏழு மணிக்கு வேதாந்த சொசைட்டி சார்பாக ஒரு வரவேற்பும் விருந்தும் கொடுத்தார்கள். இச்சங்கத் துணைத் தலைவர் திரு. டாக்டர் ஷிகூ இஷிஸீகா அவர்கள் தலைமையில் நடந்த விழாவில் பல நண்பர்கள் பேசினார்கள். ஜப்பானிய மொழியில் பேசியதை ஒரு ஜெர்மன் நண்பர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துக் கூறினார். ஜப்பான் மொழியில் பாட்டுக்களும் பாடினார்கள். எங்கள் குழுவில் வந்த திரு. ரகுராமையா அவர்கள் கர்நாடக சங்கீதக் கச்சேரியே நடத்திவிட்டார்! மேலும் யோகாசனப் பயிற்சி மூலம் மூச்சை அடக்கிவிடுவதும் இழுப்பதுமான பயிற்சியும்செய்து காட்டினார். இவருக்கு வயது எழுபத்திரண்டு ஆகிறது. ஆனால் முடி நரைக்கவில்லை. பொய்ப் பல் கட்டவில்லை. பார்ப்பதற்கு நாற்பது வயது இளைஞரைப் போல் தோற்றமளிக்கிறார் இவர். இதற்குக் காரணம், இவர் செய்து வரும் யோகாசனப் பயிற்சிதான் என்று ரகுராமையா சொல்லுகிறார். உணவு, தண்ணீர் எதையும் சாப்பிடாமல் காற்றை மட்டுமே உட்கொண்டு மனிதனால் வாழ முடியும் என்று இந்த யோகாசனப் பயிற்சியாளர் சொல்லுகிறார்.

இதற்குப் பிறகு சொசைட்டியினர் ஒரு பலமான விருந்து நடத்தினார்கள். வெறும் காற்றை மட்டுமே உட்கொண்டு உயிர் வாழலாம் என்று சொன்ன ரகுராமையாகாரு இந்த விருந்தை ஒரு பிடி பிடித்தார்! இந்திய உணவை ஜப்பானியர்களே இந்திய முறைப்படி தயாரித்துக் கொடுத்ததுதான் இதில் சிறப்பு. எங்கள் குழுத் தலைவர் திரு. ஜமூர்த்தனம் நன்றி கூறினார். கோவை நகரசபைத் தலைவர் திரு. சுக்கூர், ஒரு புத்தர் சிலையைத் தமிழக மக்கள் சார்பில் சொசைட்டியின் தலைவருக்குப் பரிசளித்தார்.

ஜப்பானில் ஏற்கெனவே வெளிநாட்டுக்காரர்கள் ஏராளமான பேர் இருக்கிறார்கள். இருந்தாலும் வெளிநாட்டிலிருந்து நாள்தோறும் பலர் வந்து கொண்டே இருக்கிறார்கள். இவர்களை வரவேற்று ஊரைச் சுற்றிக் காண்பிக்க ஏராளமான டூரிஸ்ட் ஏஜன்ஸிகளும், டூரிஸ்ட் கார்களும், டூரிஸ்ட் பஸ்களும் சுறுசுறுப்பாக இயங்கிக்கொண்டிருக்கின்றன. இங்கே பெரும்பாலான கைடுகள் பெண்கள் தான். இவர்கள் ஆங்கிலத்தில் ஒவ்வொரு இடத்தையும் அருமையாக விளக்கிச் சொல்லுகிறார்கள்.

ஜப்பானில் முதல் நாள் கியோட்டோ என்ற நகரத்திற்குக் காலை ஒன்பது மணிக்குப் புறப்பட்டுப் போனோம். போகும்போது கையில் மதிய உணவையும் எடுத்துக்கொண்டு போய் மாலைதான் திரும்பினோம். டோக்கியோவிலிருந்து இந்த இடம் 317 கல் தொலைவில் இருக்கிறது. இது மலைகள் சூழ்ந்த அழகிய பெரிய நகரம். இங்கே புத்தர் கோவில்கள் ஏராளம். சைனா, ஜப்பான்காரர்களின் பழைய மதமான ஷிண்டோ ஆலயங்கள் இங்கே இருக்கின்றன. தோதாஜ் என்ற ஆலயம் திருப்பதி கோவிலை நமக்கு நினைவூட்டுகிறது. ஆலயத்தின் வாயிற்படிகளெல்லாம் தங்கப் படிகள்!

ஐம்பத்து மூன்று அடி உயரமுள்ள பெரிய சிலை ஒன்று இந்தக் கோவிலில் இருக்கிறது. இங்குள்ள ஒரு மியூஸியத்தில் புத்தரின் பல வேறு உருவங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. தஞ்சை சரஸ்வதி மஹாலில் எப்படி நடராஜ சிவ விக்கிரகங்களைப் பல நிலைகளில் காட்சிப் பொருளாக வைத்திருக்கிறார்களோ, அதே போல இங்குப் புத்தரின் பல உருவங்களை இந்த மியூஸியம் முழுவதும் வைத்திருக்கிறார்கள். சில, கற்களால் ஆனவை. சில, வெண்கலத்தால் ஆனவை.

(தொடரும்)



☐ பேபி காலன் என்ற குழந்தை, பிறக்கும்போதே இருதய நோயுடன் பிறந்த ஒரு குழந்தை. போதிய அளவு பிராண வாயு இந்தக் குழந்தைக்குச் செலுத்தப்படாவிட்டால் உடனே இது இறந்துவிடும் என்ற நிலைமை அற்பட்டது. இந்தக் குழந்தை பிறந்த நேரம் நடு இரவு. இதனுல் ஆஸ்பத்திரியில் பிராண வாயுவைச் செலுத்தும் வலை அந்த நேரத்தில் இல்லை. ஏப்போது அங்கிருந்த ஒரு நர்சுக்கு ஒரு ஐடியா வந்தது. ஒரு பெரிய பாட்டிலை எடுத்து அதன் அடிபாகத்தை உடைத்து அந்த இடத்தில் குழந்தையின் தலையை வைத்து, மூடியின் வழியாக ஆக்ஸிஜனைச் செலுத்தினுள். ஒரு பழைய பாட்டில், ஒரு புதிய உயிரைக் காப்பாற்றிவிட்டது!

☐ படத் தயாரிப்பாளர் பந்துலு, யானை, குதிரை முதலிய மிருகங்களைத் தன் படங்களில் நடிக்க வைத்தார். படத் தயாரிப்பாளர் தேவரும் யானை, குதிரை முதலிய மிருகங்களைத் தன் படங்களில் நடிக்க வைத்தார். இவர்கள் இருவருக்கும் என்ன வித்தியாசம்? பந்துலு, புராணப் படங்களுக்கு யானை, குதிரை முதலிய மிருகங்களைப்பயன்படுத்தினுர். தேவர், சோஷியல் படங்களுக்குயானை குதிரை முதலிய மிருகங்களைப் பயன்படுத்தினுர். பட உலகில் இவர்கள் இருவரும் மிருகங்களுக்குச்செய்திருக்கும் செலவு போல் வேறு எந்தப் படத்தயாரிப்பாளரும் செலவு செய்ததில்லை! இவர்கள் இரண்டு பேரும் மிருக ராசிக்காரர்கள்!

☐ லாரிகளை டிரைவர்கள் மட்டும் ஓட்டுவதில்லை. டிரைவர்களுக்குக் களைப்பாக இருக்கும்போது கிளீனர்கள் லாரிகளை ஓட்டுகிறுர்கள். இந்தக் கிளீனர்கள் லைசென்ஸ் பெருதவர்கள். இவர்கள் தங்களுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் லாரியை எடுத்து ஓட்டுகிறுர்கள். இவர்களால்தாம் அடிக்கடி லாரி விபத்துக்கள் நடக்கின்றன!

☐ பம்பாய் நடிகை ஷப்னத்திற்குச் சிக்கன் ரோஸ்ட் சாப்பிடுவதில் அலாதி பிரியம். இதனுல் இவர் சென்னையில் தாம்பரத்திற்குப் பக்கத்தில் ஒரு பெரிய கோழிப் பண்ணை வைத்திருக்கிறுர். கோழிக் கறி ஆசை இவரைக் கோழிப் பண்ணை நடத்தத் தூண்டி இருக்கிறது. சினிமாவில் சம்பாதிக்கும் பணத்தை இவர் கோழியில் கொட்டுகிறுர்! பணம் மிஞ்சுகிறதோ என்னவோ, கோழியும் முட்டையும் மிஞ்சுமே!



# கிழக்காசிய நாடுகள்

**ஆர். நாகசுந்தரம்**

புத்தமதம் பிறந்த இந்திய மண்ணிலிருந்து வந்திருந்த எங்களுக்கு இங்குள்ள கைடு, புத்தர் வரலாறுகளைத் திணறும் வகையில் சொல்லிக் கொண்டு வந்தார். பழங்கால அரண்மனையொன்று தற்போது பயணிகளின் காட்சிப் பொருளாக இருக்கிறது. இங்கு INTER NATIONAL CONFERENCE HALL ஒன்று நமது கவனத்தைக் கவருகிறது. இந்த இடம் ஒரு மலைமேல் அமைக்கப்பட்டிருக்கிறது. இதில் ஒரு பெரிய ஏரியும், இதன் கரையில் ஒரு பெரிய மண்டபமும் இதை சுற்றியுள்ள இயற்கைக் காட்சிகளும் நம் நினைவில் பசுமையாக நிற்கின்றன.

கியோட்டோ, ஜப்பானின் பழைய தலைநகர். இது ஜப்பானிலுள்ள ஐந்தாவது பெரிய நகரம். இங்கு அரச குடும்பத்தினர் வாழ்ந்த மிகப் பெரிய அரண்மனைகள் இன்னும் புராதனச் செல்வமாக மதிக்கப்படுகின்றன. பதினைந்து இலட்சம் மக்கள் தொகை கொண்டது இந்த நகரம். ஏறத்தாழ இரண்டு கோடிப் பேர் யாத்ரீகர்களாக இந்த நகரத்திற்கு வந்து போகிறார்கள். இங்கு 300 ஷிண்டோ ஆலயங்களும், 1,600 புத்தர் கோவில்களும் இருக்கின்றன. கியோட்டோ நகரில் மட்டும் 35 கல்லூரிகள் உள்ளன. கல்லூரிகள் ஒவ்வொன்றும் சர்வகலாசாலைகள் என்று அழைக்கப்படுகின்றன. நம் நாட்டில் ஒரு சர்வகலாசாலைக்குப் பல கல்லூரிகள் இணைக்கப்பட்டிருக்கின்றன. இங்கு ஒரு சர்வகலாசாலைக்கு ஒரு கல்லூரி இணைக்கப்பட்டிருக்கிறது.

அடுத்த நகரம் நாரா. ஜப்பானின் கலைப் பொக்கிஷங்கள் நிறைந்த புராதன நகரம். இது ஒரு மலைப் பிரதேசத்தில் அமைந்திருக்கிறது.



ஆர். நாகசுந்தரம்
மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை தெரு
மலைக்கோட்டை, திருச்சி-2.
போன் : 7712

இதற்கு நாராபார்க் என்று பெயர். இங்கே ஒரு பெரிய பார்க் இருக்கிறது. உல்லாசப் பிரயாணிகளை இது மிகவும் கவர்ந்திருக்கிறது. இந்தப் பார்க்கில் மான் கூட்டங்கள் இங்கு மங்கும் அலைந்துகொண்டிருக்கின்றன. ஓய்வு நாட்களைக் கழிக்கவும் உல்லாசப் பொழுதுபோக்குக்கும் மிகவும் சிறந்த இடம் இந்த நாரா பார்க்.

இதனை அடுத்துள்ள தோத்தாய்ஜீ என்னும் புத்த ஆலயத்தில் ஒரு புத்த விக்கிரகம் இருக்கிறது. இதன் உயரம் 53 அடி. இதன் எடை 452 டன். இதனை உருக்கி வார்க்க ஐந்து ஆண்டுகள் ஆயினவாம். ஜப்பானிலுள்ள புத்த விக்ரகங்களில் மிகப் பெரிய புத்த சிலை இது.

அடுத்த நகரம் கோபே. இது டோக்கியோவிலிருந்து 406 மைல் தொலைவிலிருக்கிறது. ஜப்பானின் ஆறாவது மிகப் பெரிய நகரம் இது. இது ஒரு துறைமுக நகரம். மாயா, ரோக்கு என்ற இரு பெரிய மலைகள் இந்த நகரத்திற்கு அரண்கள்ப்போல் அமைந்திருக்கின்றன. வெளிநாட்டினரை மிகவும் கவர்ந்த நகரம் இதுதான். இதன் தட்ப வெட்ப நிலை பயணிகளை மிகவும் ஈர்த்து நிற்கிறது. மிகப் பெரிய ஜப்பானியத் துறைமுகமான இதில், ஒரு நாளைக்கு ஒரே சமயத்தில் 180 கப்பல்களை ஏற்றி இறக்கக்கூடிய வசதிகள் நிறைந்திருக்கிறது. இங்கு டெலிவிஷன் ஸ்டேஷன்கள் உண்டு. இங்குள்ள அதிகாரிகள் எங்களுக்கு டெலிவிஷன் ஸ்டேஷனைக் காட்டினார்கள். இதன் வரலாறு, இதைக் கட்ட ஏற்பட்ட செலவு, முதலியவைகளையெல்லாம் விளக்கிச் சொன்னார்கள். ஒரு படப்பிடிப்பையும் காண்பித்தார்கள். இது ஒரு மணி நேர நிகழ்ச்சி. இங்கு 110 மீட்டர் உயரமுள்ள டவர் ஒன்று நம் கவனத்தைக் கவருகிறது. இது முப்பத்தைந்து மாடிகளைக் கொண்டது. இந்த டவரைக் கீழே நின்று நிமிர்ந்து பார்த்தால் நம் கழுத்து வலியெடுக்கும். அத்தனை உயரம். இதை அரசாங்கமும் நகர சபையும், வியாபாரக் கழகங்களும் சேர்ந்து கட்டி இருக்கின்றன. இதற்கு இருபத்து நான்கு லிப்ட்கள் உள்ளன. முப்பத்தைந்தாவது மாடியில் ஆகாய மாளிகை ஒன்று கட்டி இருக்கிறார்கள். எட்டுப் புறமும் தொலைதூரக் கண்ணாடி வைத்திருக்கிறார்கள். இருபது என் நாணயத்தைப் போட்டால் தூரத்துக் காட்சிகளை அண்மையில் இருப்பதுபோல் பார்க்கலாம். ஐந்து நிமிடம் இதைப் பார்க்க அனுமதிக்கிறார்கள். மேலே கடை கண்ணிகள், காண்டீன் எல்லாம் உண்டு. பயணிகள் பார்க்க வேண்டிய இடம் இது.

அடுத்த நகரம் ஒஸாகா. ஜப்பான் நாட்டின் வெனீஸ் என்று இதைச் சொல்லுகிறார்கள். இது ஒரு பெரிய தொழில் நகரம். 1970'ல் ஜப்பான் நாட்டில் ஏற்படுத்தப்பட்ட உலகக் கண்காட்சி எக்ஸ்போ எழுபது இவற்றின் கேந்திர நகரம் இந்த ஒஸாகா. ஜப்பானின் மிகப் பெரிய இரண்டாவது நகரம் இது. இதன் ஜனத் தொகை மூன்று மில்லியன். இங்கு பல அடுக்கு மாடிகளைக் கொண்ட வீதிகளும், தொழிற்கூடங்களும் வியாபார விற்பனைக்கூடங்களும் மிக ஏராளமாக உள்ளன. கார்கள் விரைவாகப் போக EXPRESS WAY என்ற ஒரு சாலை டோக்கியோவிலிருந்து ஒஸாகா EXPO வரை பரந்து கிடக்கிறது. மின் விசையாலான அத்தனைமுன்னேற்றங்களையும் இங்குக் காணலாம். கட்டடங்கள் எல்லாம் பல அடுக்கு மாடிகள். லிப்ட் இல்லாத கட்டடங்களே இங்குக் கிடையாது. மாடிப்படி வரிசைகள் தானாகவே சுழன்று கொண்டிருக்கும். நாம் அடிப்படியில் கால்வைத்தால் நம்மை மேலே கொண்டு போய்ச் சேர்த்து விடும். நாம் படி ஏற வேண்டிய அவசியம் இல்லை. கதவுகள் முன் நின்றால் தானே திறந்துவிடும்.

எல்லா சிறு விற்பனைக் கூடம் முதல் பெரிய அலுவலகங்கள் வரை கம்ப்யூட்டர்கள்தான். மனித மூளைக்கு வேலையே இல்லை இங்கே. பிளாட்பாரங்களில் மெஷின்கள் நிறுத்தப்பட்டிருக்கும். பீர் வேண்டுமா? கொக்கோகோலா வேண்டுமா? 100 என் நாணயத்தை இந்த மெஷினில் போட்டால் டின்னில் அடைத்த கொக்கோ கோலா வரும். பீர் வரும். இன்னொரு மிஷின் சிகரெட்டுகளைத் தருகிறது. இதில் சிகரெட்டின் விலைகள் வரிசையாகப் போட்டிருக்



ஹக்னேவ் மலைப்பகுதி. கம்பி ரயில் நிலையத்துமுன் திரு. நாகசுந்தரம், திரு. ராஜு, திரு. ரங்கநாயகலு, திரு. சுக்கூர் (கோவை நகர மன்றத் தலைவர்) திரு. இரா. சனார்த்தனம்.

கும். நமக்கு எந்த ரக சிகரெட் தேவையோ அந்தச் சிகரெட் விலைக்கு நேராகச் சில்லறையைப் போட்டு அழுத்தினால் சிகரெட்டும் வரும், மீதிச் சில்லறையும் வரும். இந்த மிஷின் எல்லா பிளாட்பாரங்களிலும் உண்டு. இங்கு நெருப்புப்பெட்டிக்குக் காசு கிடையாது. எந்தக் கடைக்குப் போனாலும் மேஜை மீது ஒரு தட்டில் நெருப்புப் பெட்டிகள் கொட்டி வைத்திருக்கிறார்கள். நாமே போய் ஒரு நெருப்புப் பெட்டியை எடுத்துக் கொள்ளலாம். எல்லாக் கடைகளிலும் இந்த நெருப்புப் பெட்டிகள் உண்டு.

DEPARTMENTAL ஸ்டோர்கள் இங்கு ஏராளமாக இருக்கின்றன. இருபது அடுக்கு முப்பது அடுக்கு மாடிக் கட்டடங்கள் இங்கு சர்வசாதாரணம். ஒவ்வொரு அடுக்கும் இரு நூறு அடி நீளம், இரு நூற்று ஐம்பது அடி நீளம் இருக்கும். ஒவ்வொரு அடுக்கிலும் பெண்களுக்கு, பெரியவர்களுக்கு, ஆண்களுக்கு, குழந்தைகளுக்கு என்று ரக ரகமாகச் சாமான்கள் விற்பனை செய்கிறார்கள். பெரும்பாலும் இங்கு பெண்கள்தாம் கடைகளில் விற்பனை செய்யும் SALES WOMEN களாக வேலை பார்க்கிறார்கள்.

ஜப்பானியர்கள், குள்ளர்கள், மூக்குச் சப்பையாக இருக்கும் என்றெல்லாம் எண்ணிக்கொண்டிருந்த காலம் மாறிவிட்டது. கடந்த இருபது ஆண்டுக் கால இடை வெளியில் நல்ல உயரமாகவும் அழகாகவும் இருக்கிறார்கள்.

அமெரிக்கர்களைப் போல அவ்வளவு சிவப்பாக இல்லை. ஆனால் நம்மைப்போல அவ்வளவு கறுப்பாக இல்லை. நடுத்தரமாக இருக்கிறார்கள். மக்காக உடை உடுத்துக் கொண்டு மிகவும் சுறுசுறுப்பாக இருக்கிறார்கள். இவர்கள் அரட்டையடிப்பதில்லை. வீணைகப் பொழுதைக் போக்குவதில்லை. கருமமே கண்ணாக இருக்கிறார்கள். மரியாதையாகப் பழகுகிறார்கள். முன்புறம் குனிந்து பணிவான வணக்கம் சொல்லுகிறார்கள். பெண்கள் மினி ஸ்கர்ட் உடைதான் உடுத்துகிறார்கள்.

ஜப்பானில் அமெரிக்க நாகரிகம் பரவிய காரணத்தால் ஆண்கள் கோட்டும் சூட்டும் அணிகிறார்கள். பெண்கள் மினி ஸ்கர்ட் உடுத்துகிறார்கள். தலைமுடியை பாப் செய்து கொள்கிறார்கள். பள்ளியில் ஆண்களும் பெண்களும் சேர்ந்தே படிக்கிறார்கள். ஆரம்பப் பள்ளியில் ஆறு ஆண்டுகள் படிக்கிறார்கள். நடுநிலைப்

படிப்பு மூன்று ஆண்டுகள். உயர்நிலைப் படிப்பு மூன்று ஆண்டுகள். அதன் பிறகு கல்லூரியில் நான்கு ஆண்டுகள் படிக்கிறார்கள். அல்லது பட்டப்பின் எல்லாம் சில வருடங்கள் கல்லூரியில் படிக்கிறார்கள். இங்குத் தேசிய மொழி ஜப்பான்தான். ஆங்கிலம் போன்ற அன்னிய மொழிகளைச் சொல்லிக் கொடுக்கிறார்கள். ஜப்பானில் ஏறத்தாழ 800 சர்வகலாசாலைகள் இருக்கின்றன. இவற்றில் அரசாங்க சர்வகலாசாலைகளும் உண்டு. தனியாருடைய சர்வகலாசாலைகளும் உண்டு.

இயற்கை எழில் மிகுந்த ஜப்பானில் போக்குவரத்துக்கு இருபத்திரண்டு ஹைவேஸ்கள் இருக்கின்றன. ஆகாய விமானம், ஹெலிகாப்டர், ரயில்கள், மினி ரயில், பாதாள ரயில், எக்ஸ்பிரஸ் ரயில், மானோ ரயில், கப்பல்கள், பெர்ரிஸ்—இப்படிப் போக்குவரத்து, வானிலும், நீரிலும், தரையிலும் எல்லா வசதிகளையும் செய்திருக்கிறார்கள். இவ்வளவு இருந்தும் மக்கள் கூட்டம் நிரம்பி வழிகிறது. ரயில்கள் தனியார் துறையிலும் உள்ளன. அரசாங்க ரயில்களும் ஓடுகின்றன. ரயில் டிக்கெட் தருவதற்கு இங்கு மெஷின்களை வைத்திருக்கிறார்கள். தூரத்திற்குத் தகுந்தாற்போல் இந்த மெஷினில் விலைகளைக் குறித்து வைத்திருக்கிறார்கள். இதில் ஒரு விசையை அமுக்கினால் டிக்கெட்டும் மீதிச் சில்லறையும் வந்து விழும். எல்லா ரயில்களிலும் முதல் வண்டியிலிருந்து கடைசி வண்டி வரை உள்ளே தொடர்ச்சியாகப் போகலாம். இரண்டு பெட்டிகளை இணைக்கக் கூடிய கதவுக்குப் பக்கத்தில் நாம் போய் நின்றால் கதவு உடனே திறந்துவிடும். நாம் போன பிறகு கதவு மூடிக் கொள்ளும். பெட்டிகள் பன்னிரண்டு என்றாலும் பிளாட்பாரத்திலும் பன்னிரண்டு எண்களை எழுதிவைத்திருக்கிறார்கள். அதன் எதிரே தான் வண்டி வந்து நிற்கும். ஸ்டேஷன் வந்ததும் பிளாட்பாரம் உள்ள பக்கம் கதவுகள் தானே திறக்கும். மக்கள் இறங்கியதும், ஏறியதும் கதவுகள் தானே மூடிக் கொள்ளும். பிறகு ரயில் புறப்படும். ஒரு நிமிஷம் கூடத் தாமதம் கிடையாது. குறித்த நேரத்திற்கு ரயில் வருகிறது. போகிறது. பிளாட்பாரங்களிலும் ரயில் உள்ளேயும் ஒலி பெருக்கிகள் இருக்கின்றன. இதனால் அடுத்த ஸ்டேஷன்களைப் பற்றி அடிக்கடி அறிவிக்கிறார்கள்.

பஸ்களும், டாக்ஸிகளும், டூரிஸ்ட் பஸ்களும் எல்லாம் ஏர் கண்டிஷன் செய்திருக்கிறார்கள். ரேடியோ பொருத்தியிருக்கிறார்கள். எல்லா வண்டிகளிலும் டிரைவர் ஒரு பித்தானை அமுக்கினால்தான் கதவுகள் திறக்கின்றன. பயணிகள் வேண்டும் போதெல்லாம் கதவுகளைத்திறக்கமுடியாது. வெளிநாடுகளிலிருந்து இங்குப் பயணிகள் வருவதும் போவதுமாக இருக்கிறார்கள். டூரிஸ்ட் நிறுவனங்கள் சுறுசுறுப்பாகஇயங்குகின்றன. டூரிஸ்ட் கார் மூலமாகப் பல இடங்களை இங்குச் சுற்றிக் காட்டுகிறார்கள். வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களை மக்கள் கவரும் வண்ணம் வைத்திருக்கிறார்கள். நம் நாட்டிலும் நூற்றுக்கணக்கான சரித்திரப் பிரசித்தி பெற்ற இடங்கள் இருக்கின்றன. ஆனால் வெளிநாட்டிலிருந்து வரும் பயணிகளுக்கு இந்த இடங்களைக் காட்ட நாம் என்ன வசதிகள் செய்து வைத்திருக்கிறோம்? ஜப்பானைப்பார்க்கும்போது நாம் செய்திருக்கும் ஏற்பாடுகள் தினையளவுகூட இல்லை என்று சொல்லலாம்.

தமிழ்நாட்டிலுள்ள இயற்கை எழில் மிக்க குற்றாலம் இந்தியாவில் உள்ளவர்களில் எத்தனை பேருக்குத் தெரியும்?சித்தன்ன வாசல்,கோடைக்கானல், நீலகிரி மலைச்சாரல்,மகாபலிபுரக் காட்சிகள் இவற்றை யெல்லாம் நாம் இன்னும் முழுமையாகப் பயன்படுத்தவில்லை என்று சொல்லலாம்.

ஒஸாகாவில் மத சம்பந்தமாக ஒரு பூர்விக நாடகத்தைக் கண்டு களித்தோம். இங்குப் பிரபலமான ஜூடோக்களின் குஸ்தி விளையாட்டுக்களையும், ஒஸாகா கோட்டையையும் பார்த்து மகிழ்ந்தோம்.

ஜப்பானில் ஒரு நல்ல பழக்கம் இருந்து வருகிறது. வீதிகளில் குப்பை கூளமோ, தூசி துப்பட்டைகளோ கிடையாது. கடைகளில்

சாமான்கள் வாங்கினால் பிளாஸ்டிக் பைகளில் தருகிறார்கள். இந்தப் பைகளில் குப்பைகளைக் கொட்டி அவைகளைக் குப்பைத் தொட்டிகளில் போடுகிறார்கள். வண்டிகள் மூலமாக இந்தக் குப்பைகளை அப்புறப்படுத்துகிறார்கள். ஒரு சிறுவன் கூடத் தப்பித் தவறிக் குப்பைகளை வீதியில் வீசுவதில்லை. குப்பைத் தொட்டியில் தான் கொண்டுபோய்ப் போடுகிறான். ஆகவேதான் இங்கு வீதிகளில் தூய்மை நிலவுகிறது. கடைகளில் வாங்கக்கூடிய காலி டின்கள், சீசாக்கள், பிளாஸ்டிக் பைகள் முதலிய எல்லாப் பொருள்களும் இங்குக் குப்பைத் தொட்டிக்கே வந்து விடுகின்றன. யாரும் இவைகளைச் சேமித்து வைப்பதில்லை. அது மட்டுமல்ல, பத்திரிகை படிப்பவர்கள், படித்து முடித்ததும் பிளாட்பாரத்திலுள்ள குப்பைத் தொட்டிகளிலோ அல்லது வீதி ஓரங்களிலுள்ள குப்பைத் தொட்டிகளிலோ வீசி எறிந்து விட்டுப் போகிறார்கள். இங்கு எல்லாரும் பத்திரிகை படிக்கிறார்கள். ஆனால் பத்திரிகைகளை இங்கு யாரும் ஓசி வாங்கிப் படிப்பதில்லை!

பிரயாணம் செய்யக்கூடிய ஒருவர், கையில் ஒரு சிறு பெட்டியை மட்டும் எடுத்துக் கொண்டு செல்லுகிறார். இந்தப் பெட்டியில் இரண்டு செட் உடைகளை மட்டும் வைத்துக் கொண்டு ஊரெல்லாம் சுற்றுகிறார். எங்குப் போனாலும் உடனே சலவை செய்து தருகிறார்கள். ஷேவிங் செய்து கொள்ள வேண்டுமா? இதற்கு ஒரு மெஷின் இருக்கிறது. இதில் காசு போட்டால் ஒரு பிளாஸ்டிக் ஷேவிங் மெஷின் வருகிறது. இதனால் முகச் சவரம் • செய்து கொள்ளலாம். ஷேவிங் செய்து முடிந்ததும் இந்தக் கருவியை அப்படியே குப்பைத் தொட்டியில் போட்டுவிடலாம்!

ஜப்பானில் விவசாயத்திற்குஇடம் அதிகம் இல்லை. காரணம், ஜப்பானைச் சுற்றிலும் கடலும் மலைகளும் மிகச் சூழ்ந்து கொண்டிருக்கின்றன. இட நெருக்கடி காரணமாக இங்குள்ள கட்டடங்களெல்லாம் சிறிய இடங்களில் பெரிய பெரிய கட்டடங்களை வானத்தைத் தொடுவதுபோல் கட்டியிருக்கிறார்கள். நம் ஊரில் ஒவ்வொரு மாடியாகக் கட்டிக் கொண்டு போகிறோம். ஆனால் ஜப்பானில் அப்படி அல்ல. இருபத்தெட்டு அடுக்கு மாடி கட்ட வேண்டும் என்றால் இருபத்தெட்டு அடுக்கு உயரத்திற்கு இரும்பு கர்டர்களால் FRAME WORK கட்டுமான வேலைகளை முடித்துக் கொள்கிறார்கள். பிறகுதான் சுற்றுச் சுவர் வேலைகளைச் செய்து கட்டடத்தைக் கட்டி முடிக்கிறார்கள். இங்கு மனிதனுக்கு வேலை இல்லை. எல்லாம் மெஷின்கள்தான். பூமியைக் குடைவது, குடைந்து எடுத்த மண்ணை அப்படியே லாரியில் ஏற்றுவது, கற்களை உடைப்பது எல்லாமே இயந்திரங்கள்தாம் செய்கின்றன.

விவசாயம் செய்வதற்கு மிகக் குறைந்த நிலமே இருந்தாலும் அந்த நிலங்களில் மிகவும் கவனத்தோடு விவசாயம் செய்கிறார்கள். சிறு வயல், அதற்குத் தகுந்தபடி சிறு டிராக்டர், சிறு இயந்திரக் கலப்பை இவைகளை வைத்துக் கொண்டு இங்கு விவசாயம் செய்கிறார்கள். இங்கே நம் ஊரில் உள்ளவர்களைப் போலப் பெண்கள்தாம் நாற்று நடுகிறார்கள். நாம் ஜப்பானிய சாகுபடி முறையைப் பின்பற்றி வருகிறோம். இந்த முறையை நாம் ஏன் கடைப்பிடிக்கிறோம் என்பதை இங்கு வந்து நேரில் பார்த்த பிறகுதான் தெரிகிறது. சிக்கனமாகவும், சிறப்பாகவும் அக்கறையோடும் இங்கு விவசாயம் செய்கிறார்கள். இங்கு முட்டைகோஸ் செடிகளைப் பாலிதீன் மூடி போட்டு வளர்க்கிறார்கள். எதற்காகக் குடைபோல் இந்த மூடி போடுகிறார்கள் என்றால் அதிக வெயில் தாக்கக்கூடாது என்ற காரணத்திற்காகத்தான். இங்கு நம் ஊர்களைப்போல் அதிக மரங்கள் கண்ணில் படவில்லை. கடலும், மலையும், நதியும் சூழ்ந்து இருந்தாலும் மரங்களைப் பார்ப்பது அரிதாக இருக்கிறது. சில பகுதிகளில் மட்டும் பைன் மரங்களும், மூங்கில் மரங்களும் பூவும் செடிகளும் பயிராகின்றன.

(தொடரும்)

□ [illegible] போல் ஒரு கருவியைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். இந்தக் கருவியைப் புலி அல்லது சிங்கம் இருக்கும் கூண்டுக்குப் பக்கத்தில் நின்று கையில் பிடித்துக் கொண்டிருந்தாலே போதும். புலி அல்லது சிங்கத்தின் உடம்பின் வெப்பம் எவ்வளவு என்பதை அந்தக் கருவி காட்டும். காட்டு மிருகங்களுக்குக் காய்ச்சல் இருக்கிறதா என்று கண்டு பிடிக்கும் தெர்மா மீட்டர் இது!

□ ஒரு நாளைக்கு மூன்று வேளை அதிகமாகச் சாப்பிடுவதைவிட ஒரு நாளைக்கு ஐந்து தடவைகள் கொஞ்சம் கொஞ்சமாகச் சாப்பிடுவது உடம்புக்கு நல்லது. இப்படித் தினமும் ஐந்து வேளை சாப்பிடுகிறவர்களால் தங்களுடைய உடம்பை மிகவும் ஆரோக்கியமாக வைத்துக் கொள்ள முடிகிறது என்று ரஷ்ய டாக்டர்கள் சொல்லுகிறார்கள்!

□ டாட்டா ஒரு பெரும் பணக்காரர். அமெரிக்க நண்பர்கள் டாட்டாவுக்கு அதிகம். இதனால் தான் அமெரிக்கப் பணக்காரர்கள் டாட்டாவை ஏமாற்றி ஜம்போ ஜெட் விமானங்களை வாங்கும்படி



செய்து விட்டார்கள். விலை மிகுந்த ஜம்போ ஜெட் விமானங்களை வாங்கிய பிறகு ஏர் இந்தியா பெரும் நஷ்டமடைந்திருக்கிறது. ஒரே வருஷத்தில் ஐந்து கோடி ரூபாய்நஷ்டம்!

□ டெல்லியிலுள்ள பிரான்ஸ் டாக்கி டிஸ்டிரிப்யூட்டர்கள் போரில் ஊனமடைந்த ஜவான்களுக்கு உதவி செய்ய முன் வந்திருக்கிறார்கள். உடல் ஊனமுற்ற போர் வீரர்களுக்குத் தங்கள் வசம் உள்ள 11 சினிமா தியேட்டர்களில் ஏதாவது வேலை வாய்ப்புத் தருவதாக இவர்கள் அறிவித்திருக்கிறார்கள். கேட்கீப்பர், டிக்கட் விற்பவர், பிலிம் சரி பார்ப்பவர் போன்ற வேலைகளை உட்கார்ந்த இடத்தில் இருந்தே இந்த ஊனமுற்ற ஜவான்கள் பார்க்கலாம்.

□ சில திருடர்கள் இருக்கிறார்கள். இவர்கள் பெரிய அரசியல்வாதிகளின் வீடுகளிலும், மந்திரிகளின் வீடுகளிலும் மட்டுமே புகுந்து திருடி வருகிறார்கள். இதற்குக் காரணம், இப்போது அரசியல் வாதிகள் வீடுகளிலும் மந்திரிகளின் வீடுகளிலும் தாம் பணம் அதிகமாக இருக்கிறது!

□ மெம்பிஸ் நகரத்தில் டிரக் வண்டிகளை ஓட்டிக் கொண்டிருந்த ஓர் இளைஞன் ஓர் இசை நிகழ்ச்சி நடத்தினான். இந்த நிகழ்சிக்கு 80,000 பேர்கள் வந்தார்கள். இந்த நிகழ்ச்சியின் மொத்த வசூல் 25,00,000 ரூபாய்! அந்த டிரக் டிரைவர் யார் தெரியுமா? இன்றைய பிரபல நடிகரும் பாடகருமான எல்விஸ் பிரஸ்லி!

□ இந்தியாவும் பாகிஸ்தானும் விடுதலை பெற்று இருபத்து ஐந்து வருஷங்கள் ஆகின்றன. இந்த இருபத்தைந்து வருஷங்களில் இந்த இரு நாடுகளும் நட்புடன் இருந்ததே இல்லை. இதுவரையில் மூன்று தடவைகள் போர் நடந்தன. இந்த மூன்று போர்களிலும் இரண்டு பக்கங்களிலும் சேர்ந்து இறந்தவர்கள் மொத்தம் 23,000 பேர்!

□ நடிகர் ராஜேந்திர குமாருக்குச் சீட்டாடும் பழக்கம் உண்டு. இவர் கண்டவர்களிடம் சீட்டாடிப் பணத்தை இழப்பதில்லை. தன் வீட்டிலேயே மனைவியுடன் சீட்டாடுகிறார். மனைவியும் பெரும் பணத்தை இழக்கிறார். சீட்டாடினாலும் இவர் இழக்கும் பணம் இவர் வீட்டிலேயேமனைவியிடம் இருக்கிறது!



# கிழக்காசிய நாடுகள்

ஆர். நாகசுந்தரம்

சாலைகளில் சிறு சிறு செடிகளாக நட்டுப் பெரிய மரமாக வளர்ப்பதில்லை. பெரிய பெரிய மரமாகப் பெயர்த்து வைத்து வளர்த்து வருகிறார்கள். இங்கு ரோஜா செடிகள் பெரிய பெரிய பூக்களாகவும் வெள்ளை, நீலம், ரோஸ் கலர்களிலும் மலர்கின்றன. பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருக்கின்றன. ஆனால் இங்கு ரோஜாப்பூக்களுக்கு மணம் இல்லை. பிளாஸ்டிக் பூக்களைப் போலவே இருக்கின்றன!

இங்குக் காய்கறிகள், இறைச்சி, வெண்ணெய், திரவ பதார்த்தங்கள் அனைத்தையும் பாலிதீன் பைகளில் போட்டுத்தான் தருகிறார்கள்.

ஜப்பானில் ஒரு சிறு இடம்கூட விலைக்கு வாங்க முடியாது. அந்த அளவுக்கு அங்கே நிலங்களுக்குக் கிராக்கி. இங்குள்ள பணக்காரர்கள் ஹாவாய் தீவுகளுக்குச் சென்று அங்கு நிலங்களை வாங்கிப் போடுகிறார்கள் என்றால், இங்குள்ள நில வரங்களை நீங்களே புரிந்து கொள்ளலாம்!

ஒஸாகாவின் அருகில்தான் உலகப் புகழ் பெற்ற எக்ஸ்போ-70 பொருட்காட்சி நடந்தது. இதைப் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லை. எக்ஸ்போ எழுபது பொருட்காட்சி நடந்த இடத்தைப் பார்க்கப் போனேம். அந்த இடத்தை உல்லாசப் பிரயாணிகளுக்கு ஒருபொழுது போக்கு இடமாக இப்போது வைத்திருக்கிறார்கள். எக்ஸ்போ எழுபதின் முன் வாயில் பகுதியாக இருந்த இரும்புக் கட்டடத்தையும், லைட் ஹவுஸ் போன்ற உயரமான இடங்களையும், டெலிவிஷன் இருந்த SKELETEN இடத்தையும் அப்படியே பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். 120 அடி உயரமுள்ள அந்த மேடைக்கு லிப்ட் மூலம் சென்று பார்த்தால் EXPO-70 'ன் முழு விஸ்தீரணமும் தெரிகிறது. அப்போது கார்கள் நிறுத்திவைக்க ஏற்பட்ட இடங்களும், வரிசை வரிசையான ரோடுகளும், சிறுவர் அரங்கில் ரயில், கப்பல், ராட்டினங்கள், இறங்கி ஏறும் குதிரைகள் போன்றவை இன்னும் உபயோகப்படுத்தப்படுகின்றன. ஒரு மின்சார ரயில் நான்கு பெட்டி



ஆர். நாகசுந்தரம்
மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை தெரு
மலைக்கோட்டை, திருச்சி-2.
போன் : 7712

கண்டு கொண்டது. என்டிக்கு டாப் கிடையாது. இந்த ரயில் ஐம்பது மைல் வேகத்தில் நம்மை ஏற்றிக் கொண்டு சுற்றி வருகிறது. இருபத்தைந்து அடிக்கு மேல் உயரே ஓடுவதும் பிறகு கீழே இறங்குவதும் நம்மையெல்லாம் திடுக்கிட வைக்கிறது. எங்கே விபத்து ஏற்பட்டு விடுமோ என்ற பயம் நம்மை உலுக்குகிறது. நம் இருக்கையில் உள்ள பெல்ட்டால் நம்மைச் சுற்றிச் சுட்டிக் கொண்டுதான் இந்த ரயிலில் சுற்றலாம். இல்லாவிட்டால் இவ்வளவு வேகத்திற்கு நம்மால் இதில் உட்கார்ந்து பயணம் செய்ய முடியாது. என்னோடு வந்திருந்த அத்தனை பேரும் இறங்கினால் போதும் என்று பயந்துவிட்டார்கள். எனக்கு மட்டும் ஒரு நம்பிக்கை. இதில் இலட்சக் கணக்கானவர் ஏறிப் பயணம் செய்திருக்கிறார்கள். இதுவரை ஒரு விபத்தும் ஏற்படவில்லை. ஆகவே நமக்கு விபத்து வராது என்ற நம்பிக்கையில் இந்த ரயிலில் உட்கார்ந்து இந்த இடத்தின் அழகையெல்லாம் கண்டுகளித்தேன். இந்த ரயிலுக்கு டிரைவர் கிடையாது. புறப்படும் இடத்திலிருந்து எலக்டிரிக் மூலம் ஆப்பரேட் செய்கிறார்கள். அவ்வளவுதான். ரயில் படு வேகமாக ஓடுகிறது!

மே மாதம் 15'ல் அமெரிக்கர்கள் வசமிருந்த ஒகினவா தீவுகளை ஜப்பானியர்களுக்கு மாற்றித் தந்த விழாவை இவர்கள் மிகவும் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். ஒகினவாவிலும் டோக்கியோவிலும் ஒரே சமயத்தில் இந்த விழா நடக்கிறது. இந்த விழாவை டெலிவிஷன் மூலம் காட்டினார்கள். பார்த்து மகிழ்ச்சி அடைந்தோம்.

மே மாதம் 9'ம் தேதியிலிருந்து 15'ம் தேதி வரை ஒஸாகாவின் அருகே உள்ள தகாசுகியில் நிப்பன் வேதாந்த சொசைட்டியில்தான் எல்லாரும் தங்கியிருந்தோம். இங்கிருந்து கொண்டு ஒவ்வொரு நாளும் காலையில் டூரிஸ்ட் பஸ் எடுத்துக் கொண்டு ஜப்பானின் மிகப் பெரிய நகரங்களானகியோட்டோ, நாரா, கோபே, ஒஸாகா முதலிய இடங்களைப் பார்த்தோம். இங்கு ஏழு நாட்கள் போனதே தெரியவில்லை. இதற்கு அடுத்தபடி நாங்கள் டோக்கியோவுக்குப் போக வேண்டும். இதனால் எங்களுக்குப் பிரிவு உபசார விழா நடத்தினார்கள்.

இந்தோ—நிப்பன் கலாச்சாரக் குழுவின் தலைவரும் நிப்பன் வேதாந்த சொசைட்டியின் தலைவருமான திரு. நாராயண ஒச்சி காக்கி என்ற ஜப்பானியரது தலைமையில் விழா சிறப்பாக நடந்தது. உள்ளூரிலுள்ள வேதாந்த சொசைட்டி நண்பர்களும், பிரமுகர்களும் இந்த விழாவுக்கு வந்து சிறப்பித்தார்கள். புரபஸர் சிந்திப், கே. தாகூர், ஜே. ஜே. கிஷின் இவர்கள் இதில் முக்கியமானவர்கள். இவர்கள் இந்தியர்கள். ஆனால் பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பிருந்தே ஜப்பானில் குடியேறி ஜப்பானியப் பெண்களை மணந்து கொண்டு நல்ல முறையில் இங்கு வாழுகிறார்கள். எங்களுக்கு அவர்களை யெல்லாம் கண்டதில் ஒரு பெரும் மகிழ்ச்சி. அவர்களுக்கும் எங்களை யெல்லாம் சந்தித்ததில் ஆர்வம்.

டாக்டர் ஷிகூ இஷிஸுகா. இவர் இந்த சொசைடியின் உதவித் தலைவர். இந்த வேதாந்த சொசைட்டியில் ஜெர்மானியரும், சைனுக்காரர்களும், ஜப்பானியர்களும் அங்கத்தினர்களா இருந்து பணியாற்றுகிறார்கள். எங்கள் குழு சார்பாக திரு. ஜனார்த்தனம் அவர்கள் நன்றி கூறினார்கள்.

ஆகஸ்டு சுதந்திர நாள் விழா. இந்தியா சுதந்திரம் அடைந்து இருபத்தைந்து ஆண்டுகள் ஆகிறது. இந்த வெள்ளிவிழா சமயத்தில் ஐம்பது பேர் இந்தியாவுக்கு வருகிறோம் என்று நிப்பன் வேதாந்த சொசைட்டி தலைவர் சொன்னார். கலாச்சாரத் தூதுக் குழுவும் வணிகக் குழுவும் இந்தியாவுக்கு வந்து இந்தியாவின் நல்லுறவையும் ஒருமைப்பாட்டையும், கூட்டுத் தொழில்களையும் வளர்க்கப் பாடுபடும் என்று ஜப்பான் தலைவர்கள் கூறினார்கள்.

எங்கள் குழுவில் வந்திருக்கும் ஆந்திர நடிகர் திரு ரமுராமையா தென்னிந்தியாவில் சிறப்பாக ஆந்திரப் படங்களில் இராமன், கிருஷ்ணன் வேடங்களில் நடித்துப் பிரபல



மடைந்தவர். இங்கு இவர் கிருஷ்ணன் வேடம் தரித்து விரல்களால் புல்லாங்குழல்போல் இனிமையாக வாசித்தார்.

இங்கு வேதாந்த சொசைட்டியினர் பங்களா தேஷ் அகதிகளுக்காக நிவாரண நிதி திரட்டி நமது பாரதப் பிரதமருக்குக் கணிசமான தொகை அனுப்பி அவர்களது நல்லெண்ணத்தைக் காண்பித்துள்ளார்கள்.

மே 16'ந் தேதி காலை 8—30 மணிக்கு ஒஸாகாவிலிருந்து புறப்பட்டு அதி வேக ரயிலில் 290 மைல் தூரமுள்ள அடாமி என்ற அழகிய கடற்கரை ஊருக்கு மதியம் 12 மணிக்கு வந்து சேர்ந்தோம்.

அடாமி அழகிய சுற்றுலா நகரம். இதன் மக்கள் தொகை நாற்பதாயிரம். ஆனல் இங்கு வரும் சுற்றுலா பயணிகளும் நாற்பதாயிரம் பேருக்கு அதிகமாக இருக்கும். பயணிகள் வந்து தங்குவதற்காக ஐந்நூறு ஹோட்டல்கள் இங்கு உள்ளன. வாழ்க்கை வாழ்வதற்கே என்ற தத்துவத்துடன் சுற்றுலாப் பயணிகள் உலக நாடுகளிலிருந்து இங்கு வந்து ஹோட்டல்களில் தங்குகிறார்கள். கடலில் குளிக்கிறார்கள். வெய்யிலில் காய்கிறார்கள். இன்ப சுகங்களை அனுபவிக்கிறார்கள்.

இங்கு ஹகோனே என்ற மலை இருக்கிறது. இந்த மலை உச்சிக்கு மலை ரயில் போகிறது. இதன் உயரம் 360 மீட்டர்.

நாங்கள் பஸ்ஸில் சென்றபோது நடுவில் சர்வதேச கிராமம் ஒன்றைக் கண்டோம். அங்கு எல்லா நாடுகளைச் சேர்ந்த குடிசைகளோ அல்லது வீடுகளோ அந்தந்த நாட்டுப் பாணியில் கட்டப்பட்டுப் பயணிகளைக் கவர்ந்து நிற்கிறது. நாங்களும் நமது இந்திய இல்லத்தின் முன்நின்று படம் பிடித்துக் கொண்டோம்.

பியூஜியின் ஐந்து ஏரிகளும், பியூஜி மலையும் சுற்றியுள்ள இடமும்தான் ஹகோனே என்ற அழகிய நகரம். எல்லாக் காலத்திற்கும் ஏற்ற தட்பவெப்ப நிலை இங்கு இருக்கிறது. இதனல் இது பயணிகளின் சொர்க்கம் என்று அழைக்கப்படுகிறது. இதற்குப் பிறகு ஹகோனே மலையின் உச்சியிலுள்ள FUGIYA HOTEL ல் தங்கினோம். இங்கு எங்களுக்கு மிகவும் ஆச்சரியமான ஒரு செய்தி கிடைத்தது. இதே ஹோட்டலில் 5-10-57 நமது மறைந்த மாணிக்கம் நேரு அவர்கள் தங்கி இருந்தார்கள். இங்கு நேருஜியின் படத்தை மாட்டிவைத்து விளக்கமும் தந்திருக்கிறார்கள்.

மறுநாள் 17'ந் தேதி அதிக வேகமாக ஓடும் ரயில் மூலமாக டோக்கியோ வந்து சேர்ந்தோம். டோக்கியோவிலுள்ள மிகப் பெரிய ஹோட்டலில் தங்கிக் கொண்டு மாலையில் டோக்கியோவைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினோம்.

டோக்கியோ, மக்கள் நெருக்கம் கொண்ட மிகப் பெரிய நகரம். பழமைக்குப் பழமை, புதுமைக்குப் புதுமை இரண்டும் உண்டு. பெரிய பெரிய விளையாட்டு அரங்குகள், அடுக்கடுக்கான அலுவலகங்கள், பழைய கோவில்கள், விஸ்தாரமான தோட்

டங்கள், மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் வானளாவி நிற்கும் வனப்பு மிக்க நகரம் டோக்கியோ. கிழக்கத்திய பழமையையும், மேற்கத்திய புதுமையையும் இந்த நகரத்தில் இணைந்து நிற்பதைப் போகுமிடங்களிலெல்லாம் பார்த்தோம்.

டோக்கியோ உலகத்திலேயே மிகவும் பரபரப்பான ஒரு நகரம். மக்கள் ஓட்டம் ஓட்டமாக ஓடி நகரை நிர்மாணித்துள்ளார்கள். காணுமிடமெல்லாம் இமயமென உயர்ந்த அடுக்கு மாடிக் கட்டடங்கள். வியாபாரக் கழகங்கள். டிபார்ட் மெண்டல் ஸ்டோர்ஸ், ரயில், விமானம், கப்பல். எங்குப் பார்த்தாலும் ஒரே கூட்டம். 722 சதுர மைல் பரப்புக் கொண்டது டோக்கியோ நகரம். இங்குப் பதினேரு மில்லியன் மக்கள் வாழுகிறார்கள். இங்கு வந்துபோகும் மக்கள் தொகை மட்டும் ஐம்பது இலட்சம். கார்கள் இரண்டு மில்லியன்கள். இங்கு நாற்பதினாயிரம் டாக்ஸிகள் ஓடுகின்றன. ஒரு நாளைக்கு இரு நூறு பேர் போக்குவரத்து இடிபாடுகளில் காயமுறுகிறார்கள். ஐந்து பேர் விபத்தில் சாகிறார்கள். இத்தனைக்கும் முறையாகப் போக்குவரத்துள்ள இங்கே இப்படி விபத்துக்கள் நடக்கின்றன என்றால் இங்குள்ள நெருக்கடி எவ்வளவு என்று நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள்.

இங்குக் கார்களை இரண்டு மூன்று ஆண்டுகள் ஓட்டிவிட்டு அப்படியே தூக்கி எறிந்து விடுகிறார்கள். காலி இடங்களில்இதுபோலத்தூக்கி எறியப் பட்ட நூற்றுக் கணக்கான கார்களைக் கண்டோம். பழைய கார்களைத் தள்ளிவிட்டுப் புதிய கார்களை வாங்கிக் கொள்கிறார்கள். காரணம் இங்குக் கார்கள் மிகவும் மலிவு!

எங்கள் குழுவில் ஒருவரான சினிமாத் துறை நண்பர் திரு. ஷண்முகம், 'இந்தப் பழைய கார்களை ஏலம் விட்டால் இவைகளை எடுத்துப் போய் இந்தியாவில் நல்ல விலைக்கு விற்பனை செய்வேனே!' என்றார்!

ஜப்பானில் வளர்ந்துவரும் நாகரிகத்தைப் பற்றி வெளிநாட்டார் வேடிக்கையாக என்ன சொல்லுகிறார்கள் தெரியுமா? ஜப்பானுக்குப் போனால் நாலு C க்களைப் பார்க்கலாம் என்கிறார்கள்.

முதலாவது C-Confucians

இரண்டாவது C-Conjustion

மூன்றாவது C-Color T. V.

நான்காவது C-CoCoCola

CONFUCIANS என்றால் கன்பூஷன் என்ற மதத்தினர். CONJUSTION என்றால் நெருக்கடி. COLOR TELEVISION என்றால், கலர் டெலிவிஷன் காட்சிகள். COCO COLA என்றால் கோகோ கோலா பானம். இவைகள்தாம் இன்று ஜப்பானை ஆம்ரமித்துக் கொண்டிருப்பதாகச் சொல்லுகிறார்கள்.

ஜப்பானிலுள்ள ஒவ்வொருவரும் வேறு வகையில் நான்கு C க்களைப் பெற்றிருக்கிறார்கள். இதில் ஒன்று குறைந்தால்கூட மட்டமாக நினைக்கிறார்கள். இந்த நான்கு C என்ன தெரியுமா?

ஒன்று—கலர் டெலிவிஷன்.

இரண்டு—கார்

மூன்று—(ஏர்) கூலர்.

நான்கு—கோ கோ கோலா.

இந்த நான்கும் இல்லாத ஜப்பானியரை ஜப்பானில் பார்க்க முடியாது. அவ்வளவு முக்கியத்துவம் பெற்றிருக்கின்றன இந்த நான்கும்!

வேடிக்கையாக இன்னொன்றும் சொல்லுகிறார்கள். ஜப்பானில் எங்கே பார்த்தாலும் நடக்கும் தொழில்கள் மூன்று!

ஒன்று—இன்ஷூரன்ஸ்.

இரண்டு—பல் வைத்தியம்.

மூன்று—டோபி தொழில்.

நகைச்சுவைக்காக இந்த மூன்று தொழில்களையும் சொல்லுகிறார்கள். ஆனால் இங்கு எல்லாத் தொழில்களும் நடைபெறுகின்றன.

டோக்கியோவில் எங்களைக் கவர்ந்தது நகரின் மத்தியில் உள்ள டோக்கியோ கோபுரம்தான். டோக்கியோ கோபுரத்தை, நாங்கள் பார்க்கப் போகுமுன் ஒரு கேமராக்காரர் எங்களை டவரின் கீழ் உட்கார

வைத்துப் படம் பிடித்தார். பிறகு நீங்கள் டவரைப் போய்ப் பார்த்து விட்டு வாருங்கள் என்று சொன்னார். நாங்கள் மேலிருந்து கீழே வரும் போது எங்களைப் படம் பிடித்த அந்த கேமராக்காரர் எங்களிடம் ஒரு கலர் போட்டோவைத் தந்தார். சற்று முன் படம் பிடித்த அந்த ஸ்டில் போட்டோவை டெவலப் செய்து பிரிண்ட் போட்டு எங்களிடம் கொடுத்தார். மின்னல் வேகத்தில் இங்கு விஞ்ஞானம் வளர்ந்திருக்கும் முறையை எண்ணி வியந்தோம்!

அந்தக் காலத்தில் ஜப்பானிய சாமான்கள் என்றால் மிகவும் மட்டம் என்ற கருத்து நிலவியது. ஆனால் இந்தக் காலத்தில் ஜப்பானிய சாமான்கள் தரத்திற்கும், பலத்திற்கும்சிறந்து விளங்குகின்றன. இதை நிரூபிப்பது போல் ஸ்டீல் விட்டங்களாலான ஒரு கோபுரத்தை டோக்கியோ நகரின் மத்தியில் நிறுவியிருக்கிறார்கள். கீழே இருந்து உச்சி வரை ஸ்டீல்தான்.

1091 அடி உயரம் கொண்ட டோக்கியோ கோபுரம், பாரிஸ் நகரில் உள்ள டவருக்குப் போட்டியாக விளங்குகிறது. இதன் உச்சியிலிருந்து டோக்கியோ முழுவதும் அங்குள்ள தூரதிருஷ்டிக் கண்ணாடி மூலம் காணலாம். இந்த டவரை டெலிவிஷன் நிறுவனத்தார் ஒலி பரப்பியாகப் பயன்படுத்தும் அளவில் கட்டியுள்ளார்கள். சுற்றுலாப் பயணிகளைக் கவரும் வண்ணம் ஒவ்வொரு தட்டிலும் காண்பதற்குச் சிறப்பான அம்சங்களை வைத்துள்ளார்கள். அவைகளில் ஒன்று மூன்றாவது மாடியில் உள்ள மெழுகுக் கண்காட்சி. இலண்டன்இன்டர் நேஷனல்WAXMUSEUM ஸ்தாபனத்தார் நிறுவியுள்ள மெழுகு பொம்மைக் காட்சிகள் கண்டவரை மெய்ம்மறக்கச் செய்யும் அற்புதக் காட்சியாகும்.

எண்பதாயிரம் பேர் ஒரே நேரத்தில் இருந்து காணக்கூடிய தேசிய விளையாட்டரங்கமும் டோக்கியோவின் பெருமையை எடுத்துக் கூறுகிறது.

அச குசா கண்ணன் கோவில் என்ற கருணை வடிவான அன்னைக்கு ஒரு கோவில் கட்டியிருக்கிறார்கள். நம் ஊர்க் கோவில்களில் சாம்பிராணி போடுவதுபோல பெரிய ஒரு குண்டத்தில் சாம்பிராணியைப் புகைத்துக் கொண்டே இருக்கிறார்கள். பயணிகளும் பக்தி சிரத்தையைக் காண்பித்துக் கொள்ள இங்குச் சாம்பிராணி போடுகிறார்கள். உதய சூரியன் அடையாளமுள்ள ஜப்பான் சாமான்களை விற்பதற்கு எப்படிப் பெரிய மார்க்கெட்டாக விளங்குகிறதோ அந்த அளவுக்கு வெளிநாடுகளிலிருந்தும் சாமான்களை வரவழைத்து இங்கு வியாபாரம் செய்கிறார்கள்.

பாரிஸிலிருந்து வாசனைத் திரவியங்களும் இலண்டனிலிருந்து ட்விட் துணிமணிகளும், டென்மார்க்கிலிருந்து பாலேடுகளும், சுவிட்ஸர்லாந்திலிருந்து கெடிகாரங்களும், சைனாவிலிருந்து LOGBRISTLES களும், அமெரிக்காவிலிருந்து மூலப் பொருட்களும், பிரேஸிலிலிருந்து காப்பிமற்றும் சில பொருள்களும், காலை உணவு, ஷூஸ், கோக்கோ, Cosmetics காமிராக்கள் முதலிய சாமான்களையும் வாங்குகிறார்கள்.

ஜப்பானில் மூலைக்கு மூலை, தெருவிற்குத் தெரு MONEY EXCHANGE பணம் மாற்றம் செய்யும் தரகர்கள் இருக்கிறார்கள். சாதாரணக் கடைகளிலிருந்து பெரிய பெரிய வங்கிகள் வரை இந்த மாற்றல் வியாபாரம் செய்கிறார்கள். காரணம், உலகத்திலிருந்து சிறப்பாக அமெரிக்கா, ஐரோப்பா போன்ற நாடுகளிலிருந்து ஏராளமான பயணிகள் அமெரிக்க டாலர்களையும், பிரிட்டிஷ் பவுன்களையும் கத்தை கத்தையாகத் தங்கு தடையின்றிக் கொண்டு வந்து மாற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

மேலைநாடுகளில் பெரும்பாலோர் ஆணும் பெண்ணும் தனித்தனியே சம்பாதிப்பவர்கள். அவர்கள் வயதான காலத்தில் சேமித்து வைத்துள்ள டாலர்களையெல்லாம் ஜப்பான் போன்ற கீழ்த்திசை நாடுகளில் தண்ணீர்போல் செலவு செய்து கொண்டிருக்கிறார்கள். அந்த நாடுகள் இதனால் மேலும் வளம் பெறுகின்றன.

(அடுத்த இதழில் முடிகிறது)

◻ 'அநுபவ்' என்ற [illegible] வாகைச் [illegible] நாயகியாக நடிக்க [illegible] பெரும் அளவில் உதவி செய்திருக்கிறார். எப்படி? அந்தப் படத்திற்கான முக்கிய காட்சிகள் பலவும் தன் வீட்டிலேயே படமாக்க அவர் உதவி செய்திருக்கிறார். இது மட்டுமா? படம் பிடிக்க டைரக்டரும், மற்றவர்களும் வந்தவுடன் வீட்டிலேயே ரெடியாகக் கால்ஷீட் கொடுத்தார். மேக்கப் இல்லாமலே அவர் படத்தில் பெரும் பகுதி நடித்திருப்பதால் படம் மளமளவென்று தயாராகி விட்டது! அரசாங்கப் பரிசையும் பெற்று விட்டது. இது தயாரிப்பாளருக்கு நல்ல 'அனுபவம்' தான்!

◻ வாஷிங்டனில் ஒரு மிருகக் காட்சி சாலை இருக்கிறது. இந்த மிருகக் காட்சி சாலையிலிருந்து ஒரு பெரிய கழுகு தப்பிப் போய் விட்டது. இதன் இறக்கைகள் மட்டும் எட்டு அடி இருக்கும். இந்தக் கழுகு வாஷிங்டனைச் சுற்றிச் சுற்றி வருகிறது. இவ்வளவு பெரிய கழுகு சுற்றிச் சுற்றி வருவதைக் கண்டு பொதுமக்கள் அஞ்சுகிறார்கள். பெரிய கழுகு ஊரின் மேல் பறப்பது கெட்ட சகுனம் என்று பலர் நினைக்கிறார்கள். இது ஜனாதிபதியின் வெள்ளை மாளிகையின் மீது உட்கார்ந்து விட்டால் ஜனாதிபதிக்கு ஏதாவது ஆபத்து ஏற்படலாம் என்று நம்புகிறார்கள். இந்தக் கழுகை எவராலும் பிடிக்க முடியவில்லை!

◻ பணக்காரர்களில் பலர், அடிக்கடி சிம்லாவுக்குப் போய் ஓய்வு எடுத்துக் கொள்கிறார்கள். சிம்லாவுக்குப் போனால் மேல் நாட்டுக்குப் போவதைப் போலவே இருக்கிறது என்கிறார்கள். சிம்லாவில் பனி பெய்கிறது. எங்குப் பார்த்தாலும் பனி படர்ந்திருப்பதால், பனிச் சறுக்கு விளையாட்டு விளையாடவும் வசதியாக இருக்கிறது!

◻ சமீபத்தில் உலகப் பட விழா டெஹ்ரான் என்ற இடத்தில் நடைபெற்றது. இதில் கலந்து கொள்ள மத்திய அரசு மந்திரி ராமசாமி போயிருந்தார். இவர் பட விழாவில் கலந்து கொள்ள வேண்டிய நேரத்தில் ஆகாயத்தைப் பார்த்து கொண்டே இருக்க வேண்டியது வந்துவிட்டது. ஏன் தெரியுமா? இந்தியாவில் இருந்து இந்தப் பட விழாவில் கலந்து கொள்ள வேண்டிய திரைப்படங்கள் எதுவும் விழா ஆரம்ப நாள் வரை வந்து சேராமல் போனதுதான். படப் பெட்டிகளைத் தாங்கிய விமானம் ஏதாவதுவராதா என்று ஏக்கத்துடன் அவர் வானத்தைப் பார்த்தபடி இருந்தார். கடைசியில் ஒரே ஓர் இந்தியப் படம் வந்து சேர்ந்தது! விழாவும் நடந்து முடிந்தது!

◻ மாகாணங்களுக்கு அதிகமான அதிகாரம் கொடுக்க வேண்டும் என்று கருணாநிதி மட்டும் கேட்கவில்லை, ஜெயப்பிரகாஷ் நாராயணனும் கேட்டு வருகிறார். மாகாணங்களுக்கு அதிக அதிகாரம் கொடுக்க வேண்டும் என்று டில்லியில் வருகிற அக்டோபர் மாதம் ஒரு மகாநாடு நடத்தப் போகிறார் ஜெயப்பிரகாஷ் நாராயண்!

◻ புது மாதிரி டெலிபோனை அமெரிக்க விஞ்ஞானிகள் கண்டு பிடித்துவிட்டார்கள். இந்த டெலிபோனில் டயல் செய்துவிட்டு, பேசுவதற்குப் பதில் ஒரு காகிதத்தில் எழுதினால் எப்படி எழுதுகிறோமோ அதைப்போலவே மறு முனையில் டெலிபோனில் தன்னால் எழுதப்படும். கையெழுத்துக் கொஞ்சம்கூட மாறாது. கடிதம் எழுதும் போது டெலிபோன் பக்கத்தில் உட்கார்ந்து எழுதினால் போதும், அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டவையெல்லாம் மறு முனையில் எழுதப்படும்!

# கிழக்காசிய நாடுகள்

## ஆர். நாகசுந்தரம்



ஜப்பானில் வீதிக்கு வீதி ஒரு விளையாட்டு நடக்கிறது. கம்ப்யூட்டர் மூலம் ஒரு சூதாட்டம். ஒவ்வொரு வீதியிலும் நூற்றுக் கணக்கான மெஷின்கள் பொருத்தப்பட்டிருக்கின்றன. இவைகளில் ஒரு கைப்பிடி உள்ளது. அதைப் பிடித்து அடிக்க அடிக்கச் சிறு கோலிகள் வந்து விழுகின்றன. இதில் பல அறைகள் உண்டு. சிலவற்றில் விழுந்தால் அவை வெளியில் வரா. சிலவற்றில் விழுந்தால் அதிக கோலிகள்வெளியே வருகின்றன. வேலைக்குப் போகு முன்பும் இடைவேளையிலும் நூற்றுக் கணக்கானவர் இந்தக் கம்யூட்டர் களில் அடித்துக் கொண்டே இருக்கிறார்கள். நேரம் ஆகிவிட்டால் சேர்ந்துள்ள கோலிகளைக் கொடுத்துக் காசாக்கிக் கொண்டு போகிறார்கள். இந்தக் கம்ப்யூட்டர் சூதாட்டம் இல்லாத தெருவே கிடையாது. ஐந்நூறுக்கும் அதிகமான கம்ப்யூட்டர்கள் ஒரே கட்டடத்தில் வைத்திருக்கிறார்கள்!

மே மாதம் 19'ம் தேதி ஏர் இந்தியா விமானம் மூலம் ஹாங்காங் புறப்பட்டோம். ஜப்பானில் பிரசித்திபெற்ற மோனோ ரயிலை நாங்கள் பார்க்கவில்லை. அதற்காகவே டோக்கியோவிலிருந்து மோனோரயில் மூலமாக விமான நிலையத்திற்கு வந்தோம். மிகவும் பிரமிக்க வைக்கிறது இந்த ரயில். நடுவில் ஒரே தண்டவாளம்தான். மற்ற ரயில்களைப்போல அதி வேகமாக ஓடுகிறது. ஆனால் மற்ற வீதிகளுக்கு மேலே ஓடும்போது எங்கே ரயில் விழுந்து விடுமோ என்ற பயம் நமக்கேற்படுகிறது!

டோக்கியோ விமான நிலையத்திலிருந்து 12–50'க்கு ஏர் இந்தியாவில் புறப்பட்டு மாலை 5–35'க்கு ஹாங்காங் வந்து சேர்ந்தோம். மூன்று நாள்களைக் கொண்ட ஹாங்காங்கில் கவ்லூன் நிவில் ராயல் ஹோட்டலில் தங்கினோம்.

டோக்கியோவில் நம் இந்திய உணவு ஒரு நாயர் ஓட்டலில்தான் கிடைக்கிறது என்று கேள்விப்பட்



ஆர். நாகசுந்தரம்
மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை தெரு
மலைக்கோட்டை, திருச்சி-2.
போன் : 7712

டோம். அந்த நாட்டு ஹோட்டலைத் தேடி அலைந்த இரவு பத்து மணிக்குக் கண்டுபிடித்தோம். ஹோட்டலிலோ இந்திய உணவை தரக்கூடிய ஒரே நாயர், சாப்பாடு இல்லையென்று சொல்லி வருத்தப்பட்டார்! 'இது தமிழ்நாடு அல்ல. இங்கு இரவு பத்து மணிக்குச் சாப்பாடு கிடைக்குமா?' என்று சொல்லிவிட்டார். இதன் பிறகு ரொட்டி, பன், பட்டர், ஜாம் முதலியவைகளைச் சாப்பிட்டுக் காலத்தை ஓட்டினோம்.

ஹாங்காங்கில் கேரள அசோசியேஷன் நடத்தும் ஒரு ஹோட்டலுக்குக் காலையிலே போனோம். இங்கு காலை டிபன் கிடையாது. மதியமும் இரவும்தான் இந்தியசாப்பாடு கிடைக்கும் என்று சொல்லிவிட்டார்கள். Y. M. C. A நடத்தும் ஹோட்டலில் காலையில் காப்பி மட்டும் தருகிறார்கள். எப்படியும் இந்திய உணவைச் சாப்பிட வேண்டும் என்ற ஆவலில் கேரள சங்கத்தார் நடத்தும் ஹோட்டலுக்கு மதியம் படை எடுத்தோம். ஓரளவிற்கு நமது உணவு கொடுத்தார்கள். இங்கு மோர்என்ற பெயரே இவர்களுக்குத் தெரியவில்லை. நம் ஊர்களில் சாப்பாட்டுத் தட்டில் நெய்க் கிண்ணம் இருக்கிறதுஅல்லவா? அந்தக் கிண்ணத்தில் பால் தருகிறார்கள். அந்தப் பால் தான் காப்பிக்குப் போட்டுக் ,கொள்ள வேண்டும். அப்போது காப்பி எப்படி இருக்கும் என்பதைப் புரிந்துகொள்ளுங்கள்!

இதற்கு அடுத்தபடி தஞ்சாவூர்க்காரர்கள் நடத்தும் சோழியா அசோசியேஷன் ஹோட்டல் ஒன்று இருக்கிறது. இந்த ஹோட்டலில் சாப்பாடு பரவாயில்லை. ஆனால் மோர் நன்றாக இல்லை.

பிரிட்டிஷ் காலனியான ஹாங்காங்கில் எங்குப் பார்த்தாலும்ஆங்கிலப் பெயர் உள்ள வீடுகளும் சதுக்கங்களும் ஆங்கில எழுத்துக்கள் உள்ள விளம்பரங்களும் எங்களுக்கு ஆச்சரியத்தைத் தந்தன. காரணம், இதுவரை நாங்கள் ஜப்பான் நாட்டில் ஆங்கிலம் தெரிந்த ஜப்பானியர் எவரையும் பார்க்கவில்லை. பெரும்பாலானவர்களுக்கு அங்கு ஆங்கிலம் தெரியவில்லை. ஏதாவது ஆங்கிலத்தில் கேட்டால் பதில் சொல்லத் தெரியவில்லை. வருத்தத்தோடு Sorry என்று சொல்லிவிட்டுப் போகிறார்கள். பெரிய ஹோட்டல்களில் வரவேற்பு இடத்தில் உள்ள ஒருவரைத் தவிர மற்றவர்களுக்குப் பெரும்பாலும் ஆங்கிலம் பேசத் தெரியவில்லை.

அடுத்தது விக்டோரியா தீவு. இது மலைகள் சூழ்ந்த தீவு. இந்த மலை 1,300 அடி உயரமிருக்கிறது. நீலகிரி மலைபோல இந்த மலையின் உச்சிவரை போகவும் வரவும் நல்ல பாதைகள்போட்டிருக்கிறார்கள். இங்கு பஸ்கள் ஏராளமாகப் போய் வருகின்றன. மலையின் உச்சியில்எவ்வளவு கட்டடம் கட்ட முடியுமோ, அவ்வளவு கட்டடம் கட்டி இருக்கிறார்கள். மாடிக் கட்டடங்களைஅடுக்கடுக்காகக் கட்டி இருக்கிறார்கள். இங்குள்ள இரண்டுதீவுகளுக்கு இடையில் ஒரு மைல் அளவிற்குக் கடல் சூழ்ந்திருக்கிறது. ஒரு தீவிலிருந்து இன்னொரு தீவிற்கு பெர்ரீக்கள் மூலமாக பஸ்களும், லாரிகளும், கார்களும் பயணம் செய்கின்றன.விசைப் படகுகளும், கப்பல்களும்,நாட்டுப் படகுகளும் கடல் முழுவதும்நிறைந்திருக்கின்றன. ஒரு பெர்ரி ஏறத்தாழ பஸ், லாரி, கார்களை ஏற்றிக்கொண்டு அக்கறை சேர்க்கிறது. இங்குள்ளவர்கள் படகுகளிலேயே வாழ்க்கை நடத்துகிறார்கள். ஏறத்தாழ ஐம்பதாயிரம் பேர் இப்படிப் படகுகளில் வசிக்கிறார்கள். இங்குப் பிரிட்டிஷ் வியாபாரிகள் நிறையப் பேர் வியாபாரம் செய்கிறார்கள். விக்டோரியா சிட்டியில் ஏறத்தாழ 4,000 ஆங்கில சிப்பாய்கள் தங்கி இருக்கிறார்கள். இங்கு ஒரு வெள்ளைக்கார கவர்னர் நிர்வாகத்தைக் கவனிக்கிறார்.

இந்தத் தீவில்தான் நம் நாட்டு மரங்களான வாத மடக்கி, செம்பரத்தை மற்றும் கேரளப் பகுதிகளிலுள்ள மரங்கள் இருக்கின்றன.

இங்கு இட நெருக்கடி காரணமாகக் கார்களைப் பல அடுக்குமாடிகளில் நிறுத்தி வைத்திருக்கிறார்கள். லிப்ட் மூலமாகக் கார்களை மேலே கொண்டு செல்லவும் கீழே இறக்கவும் வசதிகள் செய்திருக்கிறார்கள்.



ஜப்பான் நாட்டில் இது சர்வ சாதாரணம். லிப்ட் இல்லாமல் கார் பாதையே கடைசி வரை போகும் மாடிகளும் ஜப்பானில் உண்டு.

ஹாங்காங்கில் சைனு சர்வகலா சாலை ஒன்றும் ஆங்கில சர்வகலா சாலை ஒன்றும் இருக்கிறது. சைனு ஹாங்காங்கிற்கு அருகில் இருப்பதால் அகதிகள் சைனுவிலிருந்து ஓடிவந்து இங்குக் குடிசைகளில் வசிக்கிறார்கள். ஹாங்காங்கில் பெரும் பெரும்பணக் காரர்களையும் ஏழைகளையும் பார்த்தோம்.

மே மாதம் 22'ந் தேதி காலை 9-45 மணிக்கு நாங்கள் விமான நிலையத்திலிருந்து புறப்பட்டுச் சிங்கப் பூருக்கு 12-45 மணிக்கு வந்து சேர்ந்தோம். அறிவிப்பாளர் இப் போது சிங்கப்பூர் மணி 10-4 என்று அறிவித்தார். இரண்டு மணி நேரம் இங்கே தங்க அவகாசம் கிடைத்தது. பெரும் மகிழ்ச்சியடைந் தோம். இங்கு இறங்கியதுமே தமி ழகத்தின் சாயல் தெரிந்தது. ஜப் பான் தீவுகளில் தென்னை, பனை, ஆல மரம் காணவே இல்லை. இங்கு எங்கே பார்த்தாலும் நமது நாட் டின் மரங்கள் இருந்ததால் தமிழகத் திலேயே இருப்பது போன்றபிரமை எங்களுக்கு ஏற்பட்டது. மேலும் தெருக்களின் பெயர்கள் விளம்பர போர்டுகள் தமிழில் எழுதப்பட்டி ருந்ததும் ஒரு காரணம்.

ஜப்பான் போல அவ்வளவு மகோன்னத நிலையை இன்னும் சிங்கப்பூர் அடையவில்லை. இருந்தா லும் மிக வேகமாக முன்னேறி வரும் நாடுகளில் ஒன்றாக உள்ளது சிங்கப் பூர். இப்போது தான் நாற்பது ஐம் பது அடுக்கு மாடிகளைக் கொண்ட கட்டடங்கள் நடைபெற்றுக் கொண் டிருக்கின்றன.

சிங்கப்பூர் உலகிலேயே உள்ள நான்காவது துறைமுக நகரம். சர்வ தேச விமான நிலையமும் ஆகும். இங்குள்ள நாணயத்தின் பெயர் டாலர் என்றும், வெள்ளி என்றும் கூறுகிறார்கள். அமெரிக்க டாலருக்கு மூன்று சிங்கப்பூர் டாலர் சமம்.

சிங்கப்பூரிலும், ஹாங்காங்கிலும் டைகர் பாம் கம்பெனியார் இரண்டு அழகிய தோட்டங்களைக் கலை அழகு டன் நிர்மாணித்திருக்கிறார்கள். இது பயணிகளைக் கவரக்கூடிய முறையில் அமைக்கப்பட்டிருக்கிறது. பறவைகள் பார்க் ஒன்றும் இங்குப் பார்க்க வேண்டிய இடம்.

நீண்ட நாட்களாக நமது இந்திய உணவிற்காக ஏங்கிக் கிடந்தநாங்கள் செலாங்கூன் ரோடிலுள்ள கோமள விலாஸ் ஹோட்டலையும், நமது உணவு வகையறுக்களையும் கண் டோம். வயிறு புடைக்கத் தின்றோம். தோசை, சாம்பார், சட்னி, ஊறு காய் இவைகளைக் காணவே எங்கள் வாய் ஊறிவிட்டது. சாப்பிட்ட

★ உங்கள் உடம்பில் மேகம் இருக்கிறதா? இருக்கலாம். புடலங்காயை எடுக்கவும். அதிலுள்ள விதைகளை நீக்கிவிடவும். அதை நன்றாக அரைக்கவும். அதனுடன் அரைப் புக் காசைக் கலந்து, மேகம் உள்ள இடங்களில் இதைத் தேயுங்கள். கொஞ்ச நேரம் கழித்துக் குளியுங்கள். மேகம் போகும்வரை இந்தப் புடலங்காய்க் குளியலைக் குளியுங்கள். புடலங்காயில் எவ்வளவு பெரிய ரகசியம் இருக்கிறது பார்த்தீர்களா? இது இயற்கை வைத்தியம்.

---

வுடன்தான் திணவுஅடங்கியது. விலையும் மற்ற நாடுகளைப்போல அல்லாமல் மிகக் குறைவாகவே உள்ளது. இதனால்தான் தமிழர்கள் பலர்சிங்கப்பூர் சென்று பிழைக்க வேண்டும் என்று ஓடினார்கள்!

இதேபோல மாயவரத்தைச் சேர்ந்த திரு. கோவிந்தசாமிபிள்ளை ஐவுளிக் கடையும் அப்படித்தான். அவர் மாயவரத்தைக்கூடமறந்துவிட்டேன்என்று சொன்னாலும் அவரை நாம் யாரும் மறக்க முடியாது. சிங்கப்பூரில் மற்ற வெளிநாட்டாரோடு ஈழத்துத் தமிழர்களையும் சர்வ சாதாரணமாகக் காணலாம்.

இங்குத் தமிழர்களின் கோவில்கள் உள்ளன. ஆண்டு தோறும் விழாக்களும் கச்சேரிகளும் நடைபெறுகின்றன. எங்களுக்கு உறுதுணையாக திரு. தங்கவேலு அவர்களும், சிங்கப்பூர் கல்வித்துறை திரு. பி. எஸ். எஸ். சலம் அவர்களும் இங்குப் பெரும் உதவிகள் செய்தார்கள்.

இங்கு இந்தியத் தூதுவர் திரு. ப்ரேம் பாட்டியா அவர்களை அவர்களுடைய இல்லத்தில்சந்தித்து உரையாடி மகிழ்ந்தோம்.

சிங்கப்பூர் தமிழ் முரசு ஆசிரியர் திரு. சாரங்கபாணி அவர்களையும் சந்தித்து அளவளாவினோம். அவர் நமது முதல்வர் டாக்டர் திரு. மு.க. அவர்களைப் பற்றியும், அவர்கள் கண் நோய் எப்படி இருக்கிறது தென்றும் விசாரித்தார்கள்.

அதன் பிறகு சிங்கப்பூர் கலாச்சார அமைச்சர் திரு. H.K. YUENTHONG அவர்களைச் சந்தித்து அரை மணி நேரம் நமது கலாசாரம் பற்றியும், அவர்களது கலாசாரம் பற்றியும் பேசிக்கொண்டிருந்தோம்.

மே மாதம் 24'ந் தேதி மாலை 3–30 மணிக்கு ஏர் இந்தியா விமானத்தில் சென்னைக்குச் செல்ல வேண்டிய எங்களை இடமில்லாத காரணத்தால், ஏர் இந்தியாநிர்வானகத்தினர் அவர்கள் விருந்தினராக மேலும் இரண்டு நாட்கள்வைத்திருந்தார்கள். சென்னைக்குப் போகிறோம் என்ற மகிழ்ச்சியோடு விமான நிலையம் சென்ற எங்களை ஏர் இந்தியா நிர்வாகத்தினர், ஆஸ்திரேலியாவில் இருந்து வரும் விமானத்தில் இடம் இல்லை, நாளை மறு நாள்தான் உங்களுக்கு இடம் கிடைக்கும் என்று சொல்லி விட்டார்கள். காரணம், சென்னையிலிருந்து வரும் விமானம் உடனே எங்களையெல்லாம் ஏற்றிக் கொண்டு சென்னை போகிறது என்று தகவல் கொடுத்தார்கள். அவர்கள் செலவில் அதே ஹோட்டலில் தங்கினோம்.

ஒரு வழியாக மே 26, மாலை 3 மணிக்கு சிங்கப்பூரைவிட்டு ஏர் இந்தியா விமானம் மூலம் சென்னைக்கு 7–30 மணிக்கு வந்துசேர்ந்தோம். வழக்கம்போல விமான அறிவிப்பாளர் இப்போது சென்னை நேரம் 5–30 என்று சொன்னார். ஆனாலும் சுங்க அதிகாரிகள் அவர்களது அலுவல்களை முடித்து எங்களை வெளியே அனுப்ப 7–30 மணி ஆகிவிட்டது. வெளியே தலையை நீட்டினோம். கடந்த இருபத்திரண்டு நாட்களுக்குப் பிறகு தமிழ் நாட்டின் காற்றைச் சுவாசித்தோம். நண்பர்கள் பட்டாளம் 24'ந் தேதியும் வந்து பார்த்துவிட்டு இப்போதும் காத்திருந்து எங்கள் கழுத்துக்களில் மாலைகளைப் போட்டு வரவேற்றார்கள்!

இருபத்திரண்டு நாட்கள் வரை ஒருவிதக் கவலையும் இல்லாமல் பயணம் செய்துவந்த எங்களைப் பல கவலைகள் ஒன்றன் பின் ஒன்றாக வந்து தாக்க ஆரம்பித்துவிட்டன!

(முற்றியது)